# வாசக மஞ்சரி

## மலர் 6.

(ஏழாம் வகுப்பு)



BY

**K. Gopalakrishna Iyer,**

*Head Tamil Pandit,*

*Municipal High School, Mayavaram.*

Published by

**MURTHY & CO.,**

**Mayavaram.**

1930.



[*Price Annas* **8.**

# வாசகமஞ்சரி

## மலர் 6.

(ஏழாம் வகுப்பு)



BY

**K. Gopalakrishna Iyer,**

*Head Tamil Pandit,*

*Municipal High School, Mayavaram.*



Published by

**MURTHY & CO.,**

**Mayavaram.**

1930.



[*Price* ***Annas*** **8.**

உ

ஸ்ரீராமஜயம்.

# முகவுரை.

---

தமிழ் மொழியிற் பல வாசக புத்தகங்களும் நிலவி வரு கின்றன. எனது வாசக மஞ்சரியின் பல மலர்களுக்கும் தமிழ் நாடு அளித்துவரும் ஆதரவு கண்டு இம்மலரையும் யான் விரிக்கலாயினன். தமிழறிவில் வல்லமை பெறுமாறும் இலக் கணப் பயிற்சி பெறுமாறும் வெவ்வேறு பொருள்களில் உணர்ச்சி அடையுமாறும் இம்மலர் விரிந்துள்ளது. கற்றவ ராயினோர் இதன்கண் உள்ள வழுக்களை உணர்த்தி என்னை நல்வழியில் ஊக்கிச் செலுத்துமாறு நான் அன்னோரைப் பிரார்த்திக்கின்றேன்.

கி. கோபாலகிருஷ்ணன்.

# உள்ளுறை



## இலக்கணப் பகுதி



## செய்யுட் பகுதி

உ

ஸ்ரீராமஜயம்.

# வாசக மஞ்சரி



## மலர் 6.

### 1. சோழர் அரசாட்சி.

தமிழ் நாடுகளிற் புகழ்பெற்றதும் வளமுடையதும் நாகரீகம் முதிர்ந்துள்ளதும் ஆகியது சோழ நாடு. தமிழ் நாடு தொன்றுதொட்டுச் சேர, சோழ, பாண்டியர்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. புறநானூறு, சிலப்பதிகாரம் முதலிய தமிழ் நூல்கள் தமிழரசர்களையும் அவருடைய ஆட்சிமுறைகளையும் சிறிது நுவல்கின்றன. அந்நூல்கள் அரசர்களின் வரலாற்றை விரிவாகக் கூறவில்லை. பண்டைக்காலத்துச் சோழ அரசர்களில் பெருநற்கிள்ளி, கரிகாலன், கோச்செங்கணான் முதலியோர் பெருமை பெற்றவர்கள். கி. பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்தே அரசர்களின் வரலாறு நன்கு புலனாகிறது. அதற்குத் துணையாகப் பல சாசனங்களும் கல்வெட்டுகளும் உள்ளன.

நான்காம் நூற்றாண்டில் பல்லவர்கள் வலிமை பெற்றுச் சோணாடு, கொங்குநாடு முதலியவற்றைப் பிடித்துக் காஞ்சீபுரம், மாமல்லபுரம் முதலிய இடங்களைத் தங்கள் தலைநகர்களாக வைத்துக்கொண்டு அரசாண்டனர். பல்லவர்களின்

ஆட்சி பத்தாம் நூற்றாண்டுவரையில் மேலோங்கி யிருந்தது. எட்டாம் நூற்றாண்டி னிறுதியினின்றே சோழர்கள் பல்லவர் களின் ஆட்சியினின்று விடுபட முயற்சி செய்தனர். ஒன்ப தாம் நூற்றாண்டிற் சோழர்கள் பல்லவர்களை எதிர்த்துச் சமராடிப் புறங்காட்டியோடச் செய்து தாங்கள் சுவாதீன ஆட்சியை யேற்படுத்தினர். விஜயாலயன் என்ற சோழன் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டான். தஞ்சை இராஜ ராஜன் காலம்வரையில் தலைநகராகப் பொலிந்தது. பின்னர் கங்கைகொண்ட சோழபுரம் அரசர்களின் உறைவிடமாயிற்று. பதின்மூன்றாம் நூற்றாண்டு முடிய சோழநாடு வலிமை பெற் றிருந்தது. அப்பொழுது ஆண்ட மன்னர்களில் இராஜராஜன் குலோத்துங்கன் முதலியோர் புகழ்வாய்ந்தவர். அதன்பின்னர் சோழர் ஆட்சிவீழ்நிலையை அடைந்தது. நாம் அக்காலத்து வேந்தரின் ஆட்சி முறைகளிற் சிலவற்றை ஆராய்வோம்.

அரசாங்கத்திற்கு மன்னனே தலைவன். மன்னன் தனது அமைச்சர்களுடன் கூடி நாட்டையாண்டான். ஆட்சியின் முழு உரிமையையும் அரசன் பெற்றிருந்தும் அவன் அமைச் சரின்றி ஒன்றும் செய்யான். இராஜ்யம் பல மண்டலங்க ளாகவும், மண்டலங்கள் கோட்டங்களாகவும், கோட்டங்கள் கூறுகளாகவும், கூறுகள் பல நாடுகளாகவும் வகுக்கப்பட்டிருந் தன. நாடுகள் பல நகரங்களையும் கிராமங்களையும் பெற் றிருந்தன. அரசன் தனது குடும்பத்திலுள்ள உற்றார் உறவினரைக்கொண்டு மண்டலங்களை ஆண்டான். அவர் களுக்கு மண்டலீகர் என்ற பெயர் வழங்கியது. மண்டலீர் களுக்கு அடுத்தவர் அதிகாரிகள். அதிகாரிகள் நாடு களுக்குத் தலைவர். அவர்கள் அரசிறைபெற்றும் நீதிநிலை நாட்டியும் வந்தனர். நாடுகளிலுள்ள நகரங்கள் அதிகாரி

களுக்குக் கீழ்ப்பட்டவையல்ல. ஒவ்வொரு நகரிலும் நகரசபை ஆட்சிபுரிந்து வந்தது. அரசன் மண்டலீகரையும், அதிகாரிகளையும், நகர சபைகளையும் நேரில் கவனிப்பது வழக்கம். மண்டலீகர் பல நாடுகளைச் சேர்த்துக் கூறுகளாகவும் பல கூறுகளைத் கோட்டங்களாகவும் தொகுத்து மேற்பார்வை செய்தனர். நகரசபைகளும் மண்டலீகருக் குட்பட்டிருந்தன. ஆண்டுதோறும் நகரமாக்கள் கூடி நகரசபையாரைப் பொறுக்கியெடுப்பர். நகரசபைக்கு வாக்களிப்பவர் சிறந்த கல்விமான்களாகவும் ஆசார சீலராகவும் இருத்தல் வேண்டும். அவர்கள் தமக்குட் சிலரைத் தேர்ந்தெடுத்தார்கள். சபையார்கள் தத்தம் வேலையிலமர்ந்து நியாய பரிபாலனஞ் செய்தனர்.

சோழராட்சியில் நிலம் ஒழுங்காக அளக்கப்பட்டது. அரசாங்க வருமானம் நிலவரியைப் பொறுத்தது. ஆதலால் நிலத்தையளந்து கணக்கிட்டாலன்றி வரியின் தொகை எவ்வாறு புலனாகும்? இராஜராஜனும் குலோத்துங்கனும் நிலத்தையளந்து விளைவுக்குத் தகுந்த வரி விதித்தனர். அரசால் தானஞ் செய்யப்பட்ட நிலங்களுக்கு இறையில்லை. தேவாலயங்களுக்குத் தானம் செய்யப்பட்ட நிலம் தேவதானம் என்றும் அறச்சாலைகட்கு விடப்பட்ட நிலம் சாலாபோகம் எனவும் அந்தணர்கட் களிக்கப்பட்டவை பட்டவிருத்தி என்றும், ஜைன பௌத்தக் கோயில்களுக்கு விடப்பட்டவை பள்ளிச்சந்தம் என்றும் பெயர்பெற்றன. வரிகளை வசூல்செய்து விநியோகம் செய்வதற்குப் பல உத்தியோகஸ்தர்களிருந்தனர். அவர்களுடைய காரியாலயம் புரவரித்திணைக்களம் எனப்படும்.

நிலவரியைத் தவிர்த்து நாட்டைக் காத்தற்கும் தொழிலாளிகள் தொழில் செய்வதற்கும் வரிகள் இறுக்கப்பட்டன. சோழர்கள் செம்பு, வெள்ளி, பொன் என்ற மூன்று உலோ

கங்களிலும் நாணயங்கள் செய்து நாட்டில் வழங்கச் செய்தனர். அக்காலத்தே நிறுத்தல் முகத்தல் முதலிய அளவுகட்கு அரசாங்கத்தாரே திட்டம் ஏற்படுத்தினர்.

நாடுகளிலெல்லாம் சாலைகள் பலவும் போக்குவரவுக்காக ஏற்பட்டன. அரசர்கள் சாலையினிருமருங்கும் நிழல்தரும் மரங்களைப் பயிராக்குவித்தனர். சாலைகளினின்று பெருவழிகளும் அவற்றினின்று கிளைவழிகளும் பிரிந்தன. சோழர்கள் தமது நாட்டை நீர்வளமாயிருக்கச் செய்வதற்கு அரும்பாடு பட்டனர். ஆதலால் சோணாடு புனனாடு என்ற பெயரைப் பெற்றது. பண்டைக்காலத்தில் கரிகாலன் காவிரியின் இருமருங்கும் கரையிடுவித்தவாறு பிற்காலத்தரசரும் பல ஆறுகளை வெட்டினர். பெருவளவன் வாய்க்கால், முடிகொண்டான், வீர சோழன், வெட்டாறு முதலியன அவ்வாறு வெட்டப்பட்டவையே. ஆறுகளைத் தவிர பல ஏரிகளுந் தோன்றின. கங்கைகொண்ட சோழபுரத்தேரியும் காவேரிப்பாக்கத்தேரியும் அவற்றுட் சிறந்தவை. ஸ்ரீரங்கத்திற்குக் கிழக்கேயுள்ள காவேரி அணைக்கட்டு சோழர்கள் காலத்திலேயே ஏற்பட்டது. வாரியத்தார் என்ற உத்தியோகஸ்தர்கள் அணைக்கட்டுகளினின்றும் ஏரிகளினின்றும் நிலங்களுக்கு நீரைப் பங்கிட்டு வந்தனர். அக்காலத்தில் எழுந்த தேவாலயங்களும் அறச்சாலைகளும் பல. பல ஆலயங்கள் புதுப்பிக்கப்பட்டன.

அரசருடைய பொக்கிஷ சாலைக்குப் பெரிய பண்டாரம் என்று பெயர். அது தலை நகரிலேயே இருந்தது. பெரிய பண்டாரத்துப் பணம் படைகளுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் கொடுக்கப்பட்ட சம்பளத்திற்கும், அரண்மனைச் செலவிற்கும், இராஜ்யத்தின் பொதுவான பல பெருஞ் செலவுகளுக்கும் உபயோகமாயிற்று. பலவகையான பத்திரங்களைப்

பார்வையிட்டு அங்கீகாரஞ் செய்யவும் உத்தியோக சாலைமுகம் இருந்தன.

சோழர்கள் யானை, குதிரை காலாட்படைகளைப் பரிபாலித்து வந்தனர். அக்காலத்தில் தேர்ப்படை இருந்ததென்பதற்கு ஆதாரமில்லை. வில், வாள், வேல், அம்பு முதலியனவே அப்பொழுதுள்ள படைக்கலங்கள். மூன்றாம் குலோத்துங்கன் காலத்துப் போர்க்களத்தில் வெடி மருந்து பயின்றதாகவும் தெரிகிறது. படைத்தலைவனுக்கு மகா சாமந்தன் என்று பெயர். மகாசாமந்தன்கீழ் தண்டநாயகர், சாமந்தன் என்ற சிறு உத்தியோகஸ்தர்கள் இருந்தனர். போர்வீரர்கள் போரில்லாத பொழுது உழுது பயிரிட்டு வந்தனர். புதிதாக வெல்லப்பட்ட நாடுகளில் அரசன் சில படைகளை எப்பொழுதும் வைத்திருந்தான். நிலப்படையே யன்றிக் கப்பற்படையும் அப்பொழுது இருந்தது. இராஜேந்திர சோழன் கப்பற் படையைக் கொண்டே ஈழநாட்டை வென்றான். அரசர்கள் பிற நாடுகளை வென்று அவ்வூரரசரிடமிருந்து திறை வாங்கினர். வேற்று நாட்டை வெல்லும்பொழுது ஊர்களை யழிப்பதும் ஒரு வழக்கமாக இருந்தது. ஆனால் கோயில் குளங்களை ஒருவரும் அழித்ததில்லை. சிற்றரசர்கள் சோழர்களுக்குக் கப்பம் கட்டியும் படை திரட்டியும் அவர்களுக்கு இடுக்கண் நேரிட்ட காலத்து உதவி புரிந்தும் வந்தனர். ஆனால் தமது நாட்டை ஆள்வதற்கு அவர்களுக்குப் பூரண சுவாதீனம் உண்டு. போரில் மடிந்த வீரர்கட்குக் கல்லினாலே அவரைப் போன்று உருச்சமைத்துக் கல்நாட்டு செய்வதுண்டு.

தமிழ் மொழியை ஆதரித்தவர் பாண்டியர் என்று கூறுவது வழக்கம். ஆனால் சோழர்களும் தமிழ் மொழியை ஆர்வமோடு கற்றுணர்ந்து தமிழ்ப் புலவர்களையும் போற்றி வந்தனர்.

அன்னார் காலத்திலே நம்பியாண்டார் நம்பி திருமுறை தொகுத்தார்; சேக்கிழார் பெரிய புராணம் பாடினார்; சயங்கொண்டார் பரணி பாடினார்; பவணந்தி நன்னூல் எழுதினார். கோயில்கள் தோறும் பதிகம் பாடும்படி பல மானியங்களைச் சோழர் விட்டுவந்தனர். சோழர்களுக்குச் சைவ மதத்தில் பற்று அதிகம். அவர்களுக்குக் குலதெய்வம் திருச்சிற்றம்பல நாதர். ஆதலால் பல அரசர்களும் அவ்வூர்க் கோயிலைப் பொன்மயமாக்கி வந்தனர். ஆய்ந்து பார்க்கையில் சோழர் ஆட்சி ஈடும் எடுப்புமற்று விளங்கியதென்பதற்குச் சான்றுகள் பலவும் உள.

---

## 2. சிவாஜி மஹாராஜர்.

சிவாஜி மன்னரை அறியாத இந்தியர் இலர். அவர் ஒரு மஹாராஷ்டிர அரசர். மஹாராஷ்டிரமொழியை இந்தியர்களிற் பெரும்பாலோர் தங்கள் தாய்மொழியாக உரிமை பாராட்டுகின்றனர். கி. பி. 1911-ம் வருஷத்தில் எடுக்கப்பட்ட கணக்குப்படி இருபதுகோடி இந்தியர்களுக்கு அது நடைமொழியாகப் பரவியுள்ளது. ஆனால் மஹாராஷ்டிர தேசம் எனப்படுவது அதிகமில்லை. தக்ஷிணபீடபூமியில் தபதி நதியின் தெற்கிலும் கிருஷ்ணா நதியின் வடக்கிலும் உள்ளமேற்குப் பாகத்திற்கே மஹாராஷ்டிரம் என்று பெயர். நான்கு நூற்றாண்டுகளுக்கு முன் அந்நாடு காடடர்ந்து இருந்தது. அங்கு போதிய மழையில்லாததால் பயிர் செயலும் குறைவாயிருந்தது. ஆதலால் அந்நாட்டிலுள்ளவர் வாழ்க்கையை நடத்த அயல் நாடுகள் சென்று தொழில் செய்யும்படி நேர்ந்தது. அவர்கள் வன்மைபெற்ற உடலமைப்புடையவராயிருந்தமையால் போர்த்தொழிலே அவர்களுக்கேற்றதாயிருந்

தது. ஆதலால் மஹாராஷ்டிரர்கள் அஞ்சாத நெஞ்சு படைத்த போர்வீரர்களாக விளங்கினர். அவர்கள் நாடும் குன்றுகள் அடர்ந்திருந்தது. வீரர்கள் அக்குன்றுகளில் கோட்டைகள் கட்டித் தனியரசு செய்து வந்தனர்.

மஹாராஷ்டிரர்களுக்கு இயற்கையிலேயே வீரம், ஆண்மை, தன்னம்பிக்கை, விடாமுயற்சி, தன்மதிப்பு முதலிய நற்குணங்கள் பொருந்தி யிருந்தன. அவர்கள் எளிய நடை பொருந்தினராயும் உள்ளொன்று புறம்பொன்று பேசும் தன்மையிலராயு மிருந்தனர். அந்நாட்டில் துக்காராம், ராம தாஸர், வாமன பண்டிதர் முதலிய பெரியோர் கிளம்பி ஜனங் களை நல்வழிப் படுத்தினர். சிறந்த படைத்தலைவர் தோன்றித் தங்களுடைய படைகளை வல்லரசுகளின்மேற்செலுத்தி வெற்றி பெற்றனர். உயிரைத் துரும்பென்றெண்ணிப் போர் செய்த போர்வீரர் கணக்கற்றவர்.

இத்துணைப் பெருமைவாய்ந்த நாட்டில் நமது சிவாஜி மன்னர் கி. பி. 1627-ம் ஆண்டிற் பிறந்தார். அவருடைய தகப்பனாராகிய ஷாஜி ஆமத் நகர சுல்தானிடம் ஒரு பெரிய உத்தியோகஸ்தர். அவருடைய தாய் சிந்துகேதனப் பிரபுவின் மகளாகிய ஜீஜீபாய். ஷாஜி பீஜப்பூர் சுல்தானிடம் வேலைக்க மர்ந்து அவனிடமிருந்து நன்கொடையாகச் சில நாடுகளைப் பெற்றான். ஷாஜி அந்நாடுகளை அரசாளத் தாதாஜிகண்ட தேவரை நியமித்துத் தன்னுடைய மனைவியையும் பிள்ளையை யும் பாதுகாக்கும்படி கட்டளையிட்டான். அவன் ஜீஜீபாயி டம் வெறுப்புக்கொண்டு அவளைத் தனிமையாகப் பூனாவில் இருக்கும்படி திட்டம் செய்தான். தாதாஜி சிவாஜியையும் அவருடைய தாயையும் தமது பிள்ளைகளைப் போலப் பார்த்து வந்தார். கணவன் தன்னிடத்தில் கொண்ட வெறுப்பினால்

ஜீஜீபாய்க்கு உலகவாழ்க்கையி லின்பங்குன்றிப் பக்திமார்க்கம் பெருகியது. அவள் தன்னுடைய பக்தியுள்ள போதனைக ளால் சிவாஜியின் இளம் புத்தியை நல்வழிப்படுத்தி அவருக் குத் தேசாபிமானம், மதாபிமானம் முதலிய நற்குணங்களைப் புகட்டினாள். சிவாஜிக்கும் கூடிப்பழக வேறொருவரு மின்மை யால் அவர் தமது தாயைத் தெய்வமாகப் பாராட்டி நடந்து வந்தனர். இராமாயணக் கதைகளும் மஹாபாரதக் கதைகளும் அவரிடத்தில் உள்ள திறமையைத் தட்டியெழுப்பின. அவர் எழுதப்படிக்க கற்றுக்கொள்ளவில்லை யாயினும் பெரியோர்க ளின் இருப்பிடம் நாடி அன்னவர் சொற்களைப் பொன்னே போல் போற்றி யொழுகினர். அவர் தமது நாட்டாரைப் போலவே படைக்கலப் பயிற்சியையும் பெற்றார். குதிரையேற் றத்தில் அவரை நிகர்த்தவர் யாருமிலர். ஆதலால் இளமையி லேயே சிவாஜியைச் சுற்றிப் பல இளைஞர்களும் கூடினர்.

தக்க வயது வந்ததும் சிவாஜிக்குத் தாம் மேல்நடத்தவேண் டிய தொழில் எதுவென்று தெரியவில்லை. ஹிந்துக்கள் மகம் மதியர்களால் அல்லலுற்று வருந்தினர். ஹிந்து மதத்திலும் ஹிந்துக்களினிடத்திலும் உள்ள பற்று சிவாஜியை ஹிந்துக்க ளின் முன்னேற்றத்திற்கு உழைக்கும்படி தூண்டியது. பீஜப் பூர் அரசாங்கமும் உட்கலகங்களாலும் கொலைகளினாலும் ஆடிக்கொண்டு அழியும்போலிருந்தது. மொகலாய அரசாங் கமோ செய்ந்நன்றி குன்றியதாயிருந்தது. ஆதலால் அவ்விரு அரசாங்கங்களிலும் உத்தியோகம் பெறுவதற்கு சிவாஜியின் உள்ளம் துணியவில்லை. ஆனால் அவ்விரு அரசுகளுக்கும் வணங்காமல் தனியரசு செலுத்துவதோ அபாயத்திற் கிடமா னது. தாதாஜி அவரைத் தம் முன்னோர்களைப்போல அவ் வல்லரசுகளுக் குட்பட்டிருக்கும்படி வேண்டினர். சிவாஜி

அவற்றைச் செவிகொடாமல் தனியரசு செலுத்தும் அபாய வழியையே மேற்கொண்டனர். தாதாஜி இறந்துவிட்டார். சிவாஜியும் தம் மனோபீஷ்டத்தைச் செலுத்த விடமுண்டாயிற்று.

சிவாஜியினிடம் பல போர்வீரர்களுஞ் சேர்ந்தனர். சிவாஜி அவர்கள் உதவியைக்கொண்டு தமது நாட்டை அரசுபுரியத் தொடங்கினர். பீஜப்பூர் அரசர்களும் வலியின்றி யிருந்தனர். ஆதலால் சிவாஜி பல கோட்டைகளையும் பிடித்து அங்கு தமது கொடியை உயர்த்தினர்; ஆங்காங்குள்ள பல சிற்றரசர்களை வென்று அவர்கள் நாட்டைக் கொள்ளையிட்டார். பீஜப்பூர் சுல்தானுக்கு இச்செய்கைகள் எட்டின. அங்கு நன் மதிப்பில் இருந்த ஷாஜி சிவாஜி சுல்தானுக்குத் துணையாகவே போரிடுவதாகச் சொல்லி அவனுடைய சினத்தை மாற்றினன். அப்பொழுது ஷாஜி தனது பிள்ளையாகிய சிவாஜிக்கும் போரையும் கொள்ளையையும் நிறுத்தும்படி சொல்லி யனுப்பினன். ஆனல் சிவாஜி தமது தகப்பன் உத்திரவைக் கேளாமல் சுல்தானுக்குரிமையுள்ள பல கோட்டைகளையும் நாடுகளையும் வென்றுகொண்டே யிருந்தார். சுல்தானுக்கு அடங்காக் கோபம் பொங்கியது. அவன் சிவாஜியை ஒரு தீராப்பகைஞனென்று கருதி ஷாஜியைச் சிறையிலிட்டான். சிவாஜியின் நிலைமை கவலைக்கிடமாக இருந்தது. அவர் தமது போர்த் தொழிலை நிறுத்தாமலிருந்தால் கைதியாக உள்ள ஷாஜி சித்திரவதைக்குட்படும்படி நேரிடும். ஆதலால் கி. பி. 1655-ம் ஆண்டு வரையிலும் சிவாஜி தமது படையெழுச்சியை நிறுத்திவாளாவிருந்தனர். சுல்தானும் பீஜப்பூரிலுள்ள பல பிரபுக்களின் வேண்டுகோட்கிணங்கி ஷாஜியை விடுவித்தான்.

அப்பொழுது ஔரங்கசீப் பீஜப்பூரை வெல்ல ஏற்பாடுகள் செய்தான். பீஜப்பூர் சுல்தான் சிவாஜிக்குத் தகுந்த நன்

கொடையளிப்பதாக ஆசை காட்டி அவரைத்தன் துணையாகக் கொண்டான். சிவாஜி தமது குதிரைப்படைகளுடன் மொகலாய இராஜ்யத்தைப் பல இடங்களிலும் எதிர்த்துப் பாழ் படுத்தினர். மொகலாயர்கள் அவரை வெல்ல முயன்றும் பயனில்லை. சிறிது காலத்திற்கெல்லாம் மொகலாய அரசாங்கத்திற்கும் பிஜப்பூர் அரசாங்கத்திற்கும் ஒற்றுமை ஏற்பட்டது. ஆதலால் சிவாஜி தமது படையெழுச்சியை நிறுத்தும்படி நேரிட்டது. பீஜப்பூரிலும் கலகங்கள் அடங்கி வல்லரசு தோன்றியது. பீஜப்பூர் சுல்தான் சிவாஜியை வென்று அவருடைய வன்மையை ஒழிக்கவேண்டுமென்று உறுதி கொண்டான்.

சிவாஜியை வெல்வது எளிதன்று. அவரை எதிர்ப்பதற்கு ஒரு படைத் தலைவனாவது உள்ளந் துணியவில்லை. இந்நிலைமையில் அப்ஸுல்கான் என்ற தலைவன் தான் சிவாஜியைக் கைது செய்து வருவதாக இராஜ சபையில் கூறினன். அரசாங்கத்தாரும் அவனிடம் ஒரு பெருஞ் சேனையை ஒப்புவித்து சிவாஜியை நயத்தாலோ பயத்தாலோ சிறைப்படுத்துமாறும் முடிந்தால் வஞ்சகமாக அவரைக் கொலை புரியுமாறும் இரகசிய உத்திரவிட்டனர். சிவாஜி தமது இராஜகிரிக் கோட்டையிலிருந்து பிரதாபகரக் கோட்டைக்குச் சென்று விட்டார். அப்ஸுல்கான் பெருஞ்சேனையுடன் மஹாராஷ்டிர நாட்டை எதிர்த்துப் பாழ் செய்தான். கொலையும் கொள்ளையுமே எங்கும் நிரம்பின. மகம்மதியர்கள் கோயில்களைத் தகர்த்தும் விக்கிரகங்களை யுடைத்தும் கலக்க முண்டுபண்ணினர். மஹாராஷ்டிரர்கள் அப்ஸுல்கானுடைய எழுச்சியைக் கண்டு நடுக்கமுற்றனர். அப்ஸுல்கான் தூதர்களை அனுப்பிச் சிவாஜிக்கு நற்புத்தி புகட்டுவது போல அவரைக் கீழ்ப்

படிந்து சமாதானம் செய்து கொள்ளும்படி கூறினன். சிவாஜி தமது சபையைக் கூட்டி என்னசெய்வது என்பதைப்பற்றி ஆலோசனை செய்தார். அமைச்சர்கள் சமாதானஞ் செய்து கொள்ளும்படி வேண்டினர். ஒரு பெருஞ் சேனையைப் போரில் இதுவரையில் மஹாராஷ்டிரர்கள் எதிர்த்ததில்லை. சமாதானமோ ஹிந்து இராஜ்ஜியத்தை சிவாஜி ஸ்தாபிப்பது என்பதற்கு முரணானது. அவருக்கு ஒன்றும் உறுதியாகப் புலப்படவில்லை. அவர் ஊணுறக்கமின்றி ஆலோசனை செய்தும் பயனில்லை. ஒருநாள் நள்ளிரவில் அவருடைய குலதெய்வமாகிய பவானிதேவி கனவிற்றோன்றி சிவாஜியினிடம் எதிரியைத் துணிந்து எதிர்க்குமாறு ஆணையிட்டார். சிவாஜியின் உள்ளமும் தெளிவடைந்தது. அவர் தமது சிறந்த படைத்தலைவரான நேடாஜியை அழைப்பித்துத் தாம் போரில் இறந்துவிட்டாலும் அரசாங்கத்தை நன்ருக நடத்துமாறு ஆக்ஞாபித்தார்.

அப்ஸுல்கான் கிருஷ்ணபாஸ்கரர் என்ற ஒரு ஹிந்துவை சிவாஜியினிடம் தூதாக அனுப்பினன். சிவாஜி அவனை வரவேற்றுப் பின் தனியிடம் அழைத்துச் சென்று 'பாஸ்கரரே' நீர் என்னுடைய மதத்தைச் சேர்ந்தவர்! ஆதலால் உள்ளொன்று புறமொன்று சொல்வது அழகன்று. நீர் உண்மையான ஹிந்துவானல் அப்ஸுல்கானுடைய உள்ளக் கிடக்கையை மறையாமல் உரைமின்' என்றனர். பாஸ்கரருக்குப் பொய்கூற மனம் எழவில்லை. ஆதலால் அவன் சிவாஜியை வஞ்சகமாகச் சிறைசெய்வதே அப்ஸுலினுடைய எண்ணம் என்று அறிவித்தான். உண்மையை அறிந்தபின் சிவாஜி தமது தூதரை அனுப்பி அப்ஸுஸ்கானிடம் தாம் சமாதானம் பேசவருவதாகச் செய்தியனுப்பினர். ஆனல் அத்தூதனிடம்

மகம்மதியப் படைகளின் அளவையும் அவர்கள் ஏற்பாட்டை யும் அறிந்து வருமாறு கட்டளையிட்டார். இரு தலைவர்களும் ஒருவரோடொருவர் பேசும்பொழுது ஒருவர் உயிர்க்கும் மற் றொருவர் தீங்கு நிகழ்த்தாவண்ணம் உறுதி மொழி வாங்கிக் கொண்டனர். மகம்மதியர் பாசறை சென்ற தூதனும் பல சூழ்ச்சிகள் செய்து உண்மையை யறிந்து சிவாஜியிடஞ் சென்று அவரைக் கொன்று விடுவதே மகம்மதியர்களுடைய எண்ண மென்று கூறினன். சிவாஜி எதிரியின் சூழ்ச்சியை வெல்ல மற்றொரு சூழ்ச்சி செய்தார்.

சிவாஜி தம்முடைய வீரர்களைப் பிரதாபகிரியின் அடித் தளத்திலுள்ள புதர்களி லொளிந்துகொள்ளும்படி செய்தார். பிரதாபகிரியின் அடிவாரத்தில் இருவர்களும் சந்திப்பதற்குக் கூடாரம் போடப்பட்டது. சிவாஜி தமது உடலையும் மண்டை யையும் காக்க இரும்புக் கவசங்களையும் கையில் எஃகு நகங்களையும் இடையில் ஒரு சிறு ஈட்டியையும் அணிந்து அவற்றைத் தமது உடைகளினல் மறைத்துக்கொண்டார். அரசருடன் கூட இரண்டு வீரர்கள் வாள்களுடன் சென்றனர் அன்னோர்கள் பார்வைக்குச் சாதாரண மனிதராகவே புலப் பட்டனர். மூவரும் கோட்டைவாயிலை அடைந்ததும் ஜீஜீபாய் அவர்கள் முன்தோன்றி 'வெற்றிபெறுக' என்று வாழ்த்தினள். அப்ஸுல்கானும் சிவாஜியைப் போலவே இரண்டு வீரர்களுடன் கூடாரத்திற்கு வந்தனன். கூடா ரத்தின் நடுவில் ஒரு மேடையின் மீதுசிவாஜிக்கும் அப்ஸுல்கானுக்கும் இருக்கைகள் அமைக்கப்பட்டிருந் தன. அப்ஸுல்கான் ஒன்றில் அமர அவனுடைய துணைவர் கள் கீழே நின்றனர். சிவாஜியும் தம் துணைவர்களைக் கீழே நிறுத்திவிட்டு மேடையின்மீது அடிவைத்தனர். அப்ஸுல்

கான் பக்கத்தில் ஒருவாள் ஒளிசெய்துகொண் டிருந்தது. சிவாஜி மேடையிலேறிப் பணிய அப்ஸுல்கான் இருக்கை விட்டெழுந்து அரசரை வரவேற்க அவர் கைகளைப் பிடித் தான். இரண்டொரு நிமிஷங்களில் கைப்பிடி இறுகிவிட்டது. அப்ஸுல்கான் சிவாஜியின் கழுத்தைத் தன்னிடது புயத்தால் வளைத்துக்கொண்டு ஒரு ஈட்டியை யெடுத்து அவர்மீது பாய்ச் சினான். அவர்மீதிருந்த கவசங்கள் அவரைக் காப்பாற்றின. ஆனால் சிவாஜி மூச்சுவிட முடியாமல் திக்குமுக்காடினார். உடனே அவர் தானுடைய இடையை தம் மொற்றைக் கையா லிறுக்கிக்கொண்டு மற்றொரு கையிலுள்ள எஃகு நகங்களை அப்ஸுலினுடைய வயிற்றிற் பாய்ச்சி அதனைக் கிழித்தார். அப்ஸுலின் பிடி தளர்ந்தது. சிவாஜி கீழே குதித்து ஓடினார். கொலை! கொலை! என்று அப்ஸுல் கதறினான். அப்ஸு லின் வீரர் சிவாஜியை எதிர்த்தனர். ஆனால் அவர்கள் அரச ரது வீரரால் கொலையுண்டனர். அப்ஸுலினுடைய தலையும் கொய்யப்பட்டது. வெளிச் சென்ற சிவாஜி ஒரு குண்டு போட்டார். முன்பாகவே எச்சரிக்கை செய்தவாறு குண்டுச் சப்தத்தைக் கேட்ட மஹாராஷ்டிர வீரர்கள் புதர்களினின்று கிளம்பி மகம்மதியரை எதிர்த்தனர். நேடாஜி என்ற மஹா ராஷ்டிர தளகர்த்தர் பீஜப்பூர் சேனையை ஓடவிடாமல் வளைத் துக்கொண்டு வீரர் பலரையுங் கொன்றனர். மஹாராஷ்டிரர் கையில் அகப்பட்ட பொருள்களும் போர்க் கருவிகளும் எண் ணிறந்தன. கைதிகளும் கணக்கற்றவர். நாடெங்கும் ஆச் சரியமும் அதிசயமும் தோன்றின. பீஜப்பூரில் மிகுந்த பர பரப்பு ஏற்பட்டது.

ஔரங்கஜீப் பீஜப்பூர் அரசாங்கத்தாருடன் கலந்து கொண்டு சிவாஜியை வெல்வதற்கு வழிதேடினான். மொகலாய

சேனாதிபதியாகிய ஷெயிஸ்டகான் ஒரு பெருஞ் சேனையுடன் மஹாராஷ்டிரத்திற்கு வந்துசேர்ந்தான். அவன் பல விடங்களைப் பிடித்துக்கொண்டு பூனாவில் வந்து தங்கினான். பாசறையினிடையில் ஷெயிஸ்டகானுடைய கூடார மிருந்தது. அதனை வீரர்கள் பலர் இடைவிடாது காத்து நின்றனர். சிவாஜி ஷெயிஸ்டகானுடன் எதிர்த்துப் போராட முடியாதென்று அவனை வஞ்சகமாகத் துரத்த எண்ணினார். பதினாயிரக் கணக்கான வீரர்களினிடையி லிருக்கும் ஒரு சேனாதிபதியை எவ்வாறு வஞ்சிப்பது? சிவாஜியின் கூரிய அறிவிற்கும், மனோதிடத்திற்கும் அது அரியதன்று.

சிவாஜி நேடாஜியின்கீழ் படைவீரர்களைப் பூனாவின் பக்கத்திலிருத்தி தாம் நானூறு படைவீரர்களுடன் ஒருவருக்கும் புலனாகாதவாறு பூனாவின் அருகில் வந்து சேர்ந்தார். நள்ளிரவில் அவர் தமது வீரர்களுடன் பாசறைக்குள் புகுந்தனர். மொகலாய வீரர்கள் அவர்களைத் தடுக்க சிவாஜி தாங்கள் தக்ஷிணத்திலிருந்துவந்த மொகலாயப் படையாளரென்று கூறி யுட்சென்றனர். அப்பொழுது ரம்ஸான் பண்டிகையாதலால் மகம்மதிய வீரர்கள் யாவரும் பகல்முழுதும் பட்டினியிருந்து இரவில் போஜனம் செய்துவிட்டு அயர்ந்து நித்திரை செய்தனர். சில சமையற்காரர் மட்டும் அப்ஸல்கானுடைய வீட்டின் கதவைத் திறந்து வேலை செய்துகொண் டிருந்தனர். சிவாஜி உட்புகுந்து சமையற்காரரைக் கொன்று விட்டனர். ஷெயிஸ்டகான் தூங்கிக்கொண்டிருந்த அறைக்கும் சமையலறைக்கும் இடையில் ஒரு சுவரிருந்தது. படுக்கையறை தாளிடப்பட்டிருந்தது. ஆதலால் சிவாஜி அச்சுவரில் கன்னமிட்டார். கன்னத்தின் அரவமும் இறந்துகொண் டிருந்தவர்களின் ஓலமும் சில காவலரை எழுப்ப அவர்கள் ஷெயிஸ்டகானிடம் ஏதோ

ஒரு அரவம் ஏற்பட்டதாக அறிவித்தார்கள். சேனுபதி அவர் களை ஒன்றுமில்லாதவொரு அரவத்திற்காகத் தன்னைத் துயி லெழுப்பியதற்குச் சினந்து வாளா விருந்தான்.

சுவரில் செய்யப்பட்ட பொந்து ஒரு மனிதன் உட்புகு மளவு ஆய்விட்டது. உடனே சிவாஜி சிறந்த ஒரு துணைவ னுடன் முதலிற் பள்ளியறையிற் புகுந்தார். அவர்களோடு இருநூறு மஹாராஷ்டிர வீரர்களும் ஒருவர்பின் னொருவரா கப் பின்தொடர்ந்தனர். பள்ளியறையில் பல மறைப்புகள் துணியினுல் கட்டப்பட்டிருந்தன! சிவாஜி அவற்றைத் தமது உடைவாளால் கிழித்துச் சென்ருர். சேனுபதியின் படுக்கை யின் பக்கத்திலிருந்த அடிமைப்பெண்கள் பலர் அரவங்கண்டு விழித்து சேனுபதியைத் தட்டியெழுப்பினர். ஆனுல் சிவாஜி சேனுபதி எழுவதற்குமுன் அவன்மேற் பாய்ந்து தமது வாளை வீசினுர். வாள் குறிதவறி சேனுபதியின் கட்டைவிரலை மட் டும் துணித்தது. அப்பொழுது அடிமைப் பெண்களில் ஒருத்தி விளக்குகளை அவித்தனள். எங்கும் இருள் செறிந் திருந்தது! அப்பெண்கள் இருட்டின் உதவியினுல் சிவாஜி யினிடமிருந்து சேனுபதியைத் தூக்கிச் சென்று விட்டனர். உடனே குத்தும் வெட்டுந் தொடர்ந்தன. வீட்டின் வெளி யில் இருந்த மஹாராஷ்டிர வீரர்களும் தூங்கிக்கொண்டும் அரைவிழிப்போடும் இருந்த மொகலாய வீரர்மீது பாய்ந்து பலரைக் கொன்றனர். குழப்பமும் கூச்சலும் ஏற்பட்டன. சிவாஜி தம்முடைய வீரர்களை யழைத்துக்கொண்டு குழப்பத் தின் நடுவில் வெளிவந்து விட்டனர். மொகலாயர்கள் விழித் தெழுந்து எதிரிகளைத் தேடுவதற்குள் அவர்கள் ஓடிவிட்ட னர். சிவாஜியினுடைய தீரமும் தந்திரமும் பொருந்திய இச் செய்கை யாவரையும் வியப்புறச் செய்தது. பலர் அவரை

மந்திர சக்தியுள்ளவரென்றே நம்பினர். மொகலாயர்கள் வெட்கத்தினால் தலைகுனிந்தனர். ஷெயிஸ்டகான் கி. பி. 1564-ம் ஆண்டில் தக்ஷிணத்தை விட்டுச் சென்றான்.

சிவாஜியின் படையெழுச்சிகளும் கொள்ளைகளும் வெற்றிகளும் எண்ணிலாமற் பெருகின. சூரத்து நகரம் கொள்ளையடிக்கப்பட்டது. அதினின்று சிவாஜிக்குப் பெருகிய செல்வம் அளவிடற்பாலதன்று. ஔரங்கசீப் மனமுடைந்து சிவாஜியை வெல்ல ஜயசிங்கன் என்ற ஒரு இணையிலா வீரரை அனுப்பினான். ஜயசிங்கன் மிகுந்த சமர்த்தன். அவன் சிவாஜியின் எதிரிகளுக்குப் பல ஆசைகளைக் காட்டித் தன்னோடு சேர்த்துக் கொண்டான்; மஹாராஷ்டிர சேனையின் வீரர் பலரையும் சேனாதிபதிகள் பலரையும் பெரிய உத்தியோகங்கள் கொடுத்தும் பணம் கொடுத்தும் தன் பக்கத்தில் இழுத்துக் கொண்டான். சிவாஜிக்குப் பல இடங்களிலும் எதிர்ப்பு ஏற்பட்டது. அவருடைய நாடு இரக்கமின்றி சூறையாடப்பட்டது. ஜயசிங்கன் பல கோட்டைகளையும் பிடித்து விட்டான். மஹாராஷ்டிர பிரபுக்கள் தங்குடும்பங்களுடன் புரந்தரபுரக் கோட்டைக்கு ஓடிவிட்டார்கள். புரந்தரபுரமும் முற்றுகை செய்யப்பட்டது. எண்ணிறந்த மொகலாயர்களின்முன் துணையற்ற புரந்தரபுரம் பிடிபடும் தருவாயிலிருந்தது. அதனைக் காத்த வீரர் பலருஞ் செருக்களத்தில் மடிந்தனர். கோட்டை பிடிபட்டால் மஹாராஷ்டிர குடும்பங்கள் பகைவர் வாளுக்கு இரையாகும். எதிரிகளினின்று தப்புவதும் முடியாததொன்று. ஆதலால் சிவாஜி கி. பி. 1655-ம் வருஷத்தில் ஜயசிங்கனுக்குப் பணிந்து உடன்படிக்கை செய்து கொண்டார். அதன்படி மஹாராஷ்டிரர்களுக்குச் சொந்தமான பல கோட்டைகளும் நாடுகளும் மொக

லாயர் வசமாயின. சிவாஜியும் அடிமையரசாகி மொகலாய ருக்குதவியாகத் தக்ஷிணத்தில் போர் புரிந்தார்.

ஔரங்கசீப் சிவாஜியைத் தன் தலைநகருக்கழைத்தான். ஜயசிங்கன் சக்கரவர்த்தியினிடமிருந்து பல நன்கொடைகளும் சிவாஜிக்குக் கிடைக்குமென்று சொன்னான். ஆனால் சிவாஜி மொகலாய சக்கரவர்த்தியிடம் போனால் தமது உயிருக்கு ஒரு தீங்கும் நேரிடக்கூடாதென்று உறுதி மொழி பெற்றுக்கொண்டார். ஜயசிங்கனும் தனது பிள்ளையைக் கூட அனுப்பிச் சிவாஜிக்கு ஒரு ஆபத்தும் நேரிடாதவாறு பாதுகாக்கும்படி கூறினான். ஆக்ரா நுழையும் வரையில் சிவாஜிக்குப் பல வரவேற்புகளும் நடந்தன. சிவாஜி இராஜ சபையிற் புகுந்தார். அங்கு அவருக்கு மிகுந்த ஏமாற்றம் ஏற்பட்டது. மொகலாய சக்கரவர்த்தி அவரைத்தனக்குச் சமானமாக நடத்தாமல் தன்னிடம் வேலை பார்க்கும் ஒரு பிரபுவுக்குரிய மரியாதைகளை மட்டுமே செய்தான். சிவாஜிக்கு வருத்தமும் ஆற்றாமையும் மேலிட்டன. அவர் தம்மைத் தற்கொலை செய்து கொள்ளவும் சக்கரவர்த்தியைத் தாக்கவும் பல முறை முயன்றார். ஆனால் அவர் பக்கத்திருந்த ஜயசிங்கனுடைய புதல்வன் அவரை ஆற்றுதல் செய்து உறைவிடம் அழைத்துச் சென்றான். சக்கரவர்த்தி சிவாஜியின் நடையினால் வெகுளி பெருகி அவருடைய உறைவிடத்தைக் காவலுக்குட்படுத்திவிட்டான். சிவாஜி சிறையாளியானார். அவருடன் பின்தொடர்ந்த சாம்பாஜி என்ற அவர் பிள்ளையும் சில மஹாராஷ்டிர வீரர்களும் என்ன செய்வார்கள்! ஆதலால் சிவாஜி நயத்தினாலேயே தப்பவேண்டுமென்று சக்கரவர்த்திக்குப் பல முறையும் தம்முடைய பணிவைப்பற்றிச் சொல்லியனுப்பினார்; மொகலாய முதன் மந்திரியையும் அவனுடைய உத்திரவின்மேல் சென்று பார்வையிட்டார். யாவும் பயனற்றன.

சிவாஜி பல நாட்கள் மேலேசெய்ய வேண்டியதைப்பற்றி ஆலோசனை செய்தார். இறுதியில் அவர் தம்முடன் கூட வந்தவர்களை ஊருக்குத் திரும்பிச் செல்ல உத்திரவு கொடுக்குமாறு சக்கரவர்த்தியைப் பிரார்த்தித்தார். சக்கரவர்த்தி வீரர்களும் சென்ற பிறகு சிவாஜியைத் தன்னிஷ்டப்படி நடத்தலாமென்று எண்ணி அதற்குச் சம்மதித்தனன். சிவாஜியும் சாம்பாஜியும் வேறிரண்டொருவருடன் ஆக்ராவிலேயே தங்கினர். பிறகு சிவாஜி தமக்குஉடம்பு சௌகரிய மில்லையென்று நடித்தார். அவர் நகரத்திலுள்ள அந்தணர்களுக்குப் பல தானதருமங்கள் செய்தார். போலிப்பிணி பலநாள் நீடித்தது. சிறை வீட்டினின்று நகரத்திலுள்ள வேதியர்களுக்குக் கூடை கூடையாகப் பொருள்கள் சென்றன. மொகலாயக் காவலாளிகள் சிலநாட்கள் வரையிலும் கூடைகளைப் பரிசோதித்தனர். பின்னர் அவர்களுடைய ஐயம் நீங்கிக் கூடைகளை வாளா விடுத்தனர். சிவாஜி அதனை யறிந்தார். அவர் தம்மைப்போல் வடிவமுள்ள ஒரு மஹாராஷ்டிரரைத் தமது படுக்கையில் கிடத்தித் தாமும் தமது மகனும் இரு கூடைகளிற் பதுங்கிக்கொண்டனர். வழக்கம்போல் காவலாளிகள் அக்கூடைகளைப் பரிசோதிக்கவில்லை. சிவாஜியும் சாம்பாஜியும் இருந்த கூடைகள் மட்டும் நகரத்தின் வெளியில் கொண்டுபோகப்பட்டன. தூக்கியவர்களுக்கு ஏராளமான பரிசுகளை அளித்துவிட்டு சிவாஜியும் சாம்பாஜியும் பிச்சைக்காரர்போல் வேடம்புனைந்து ஓடிவிட்டனர். சிறைவீட்டில் இரண்டுநாள் வரையில் காவலாளிகள் சிவாஜியின் படுக்கையைப் பார்த்துவிட்டுச் சிவாஜி உள்ளே இருப்பதாக வெண்ணினர். மூன்றாம்நாள் அப்போலிப் பிணியாளியும் எழுந்து வெளிச்சென்று காவலாளிகளிடம் பிணியாளராகிய சிவாஜியை

இரைச்சல்போட்டு அல்லற்படுத்தா திருக்கும்படி சொல்லி விட்டுப்போயினன். சிறிதுநேரமானதும் காவலாளிகள் உள்ளேசென்று பார்க்கப் படுக்கையில் நோயாளியில்லை. சிவாஜி மாயமாக மறைந்துவிட்டார்! சக்கரவர்த்திக்கு விஷயம் அறிவிக்கப்பட்டது. ஔரங்கசீப் மிகுந்த சினமுற்றுத் தனது நாடெங்கும் தப்பிய சிவாஜியைப் பிடிக்குமாறு கடுமையான கட்டளை செய்தான். மொகாலய இராஜ்ஜியம் முழுவதும் சோதனை போடப்பட்டது. ஆக்ராவிலிலுள்ள மஹாராஷ்டிரர் யாவரும் சிறையாயினர். அவர் சித்திரவதை செய்யப்பட்டவுடன் உண்மையை உரைத்துவிட்டனர். சிவாஜி தமது பிள்ளையுடன் வடமதுரைக்கு வந்து விட்டனர். சாம்பாஜிக்கு நடை தள்ளாடிற்று. ஆதலால் சிவாஜி அந்நகரில் உறைந்த சில மஹாராஷ்டிரர்கள் வசம் சாம்பாஜியை ஒப்புவித்தார். அவர்களும் சாம்பாஜியை வெளிக்குத் தெரியாமல் காப்பாற்றினர். சிவாஜி காசிக்குப்போகும் வழியில் ஒரு நவாப்பு அவரை ஐயுற்றுச் சிறை செய்தான். சிவாஜி அவன் கையில் ஏராளமான இலஞ்சம் கொடுத்துவிட்டு ஓடிவிட்டார். அவர் தமது தாடியையும் எடுத்துவிட்டுப் பற்பல வேடங்களுடன் சென்றார். ஒரு முறை அவர் நடக்கக் களைப்படைந்து குதிரைவியாபாரியிடம் சென்று பல பொன் நாணயங்களைக் கொடுத்துக் குதிரையைக்கொடுக்கும்படி வேண்டினர். அவ்வியாபாரி 'ஒரு குதிரைக்கு இவ்வளவு பொன்னைக்கொடுப்பவன் சிவாஜியே' என்று சொல்லி வாய்மூடுமுன் தம்முடைய பணப்பையை அவனிடம் கொடுத்துவிட்டு ஓடினர். இவ்வாறு பல நாட்கள் கஷ்டப்பட்டு சிவாஜி தமது ராஜகிரிக்கோட்டையை அடைந்தார். மதுரை வியாபாரிகளும் பின்னர் சாம்பாஜியை மாறுவேஷத்துடன் இராஜகிரிக்குக் கொண்டுவந்து சேர்த்தனர்.

மஹாராஷ்டிரம் களிப்பினூற் பொங்கியெழுந்தது. ஒளரங்கசீப் ஜயசிங்கன்மீதும் அவனுடைய புதல்வன்மீதும் சிவாஜியின் நண்பர் என்று ஐயங்கொண்டுவிட்டான். ஜய சிங்கன் மனமுடைந்து தக்ஷிணத்திலிருந்து திரும்பினுன். மஹாராஷ்டிரர்கள் வீராவேசங்கொண்டு மொகலாய இராஜ் யங்களைப் பிடித்துச் சூறையாடினர். ஒளரங்கசீபின் முயற்சிக ளெல்லாம் பாழ்பட்டன. கி. பி. 1674-ம் ஆண்டில் சிவா ஜிக்கு மிகவும் விமரிசையாகப் பட்டாபிஷேகஞ் செய்யப்பட் டது. மஹாராஷ்டிர இராஜ்யம் பலமாக ஸ்தாபிக்கப்பட்டது. ஹிந்துக்களின் ஆட்சி கிளைத்தெழுந்தது.

சிவாஜி மஹாராஜர் தமது ஆயுள் முடிய மொகலாயருக் குத் தீராப் பகைவரானுர். அவர் தெற்கே தஞ்சாவூர் வரையிலு முள்ள பல நாடுகளையும் மைசூர், மேற்குக்கரை நாடுகளையும் ஜயித்தார்; இந்தியாவில் இணையற்ற மன்னரென்று பெயர் பூண்டு கி. பி. 1680-ம் வருஷம் வரையில் நாட்டை யரசாண் டார்.

சிவாஜி மஹாராஜரிடம் ஒவ்வொருவரும் கற்கவேண்டும் நீதிகள் பல. அவர் உத்தம குணசீலர்; அடக்கமுள்ள பிள்ளை; அன்புள்ள பிதா; அவர் தம் வாழ்நாளில் ஒரு துன்மார்க்கத் திலும் புகவில்லை. பெரியோர்களிடத்தில் அவருக்கிருந்த பக்தி எல்லையற்றது. எல்லாமதங்களுக்கும் அவர் துணைவர். மதத்துவேஷம் என்பது அவரிடத்தில் இல்லை. நியாயத்திற்கு அவர் இணையில்லாதவர். ஒரு முறை தமது பிள்ளை சாம் பாஜி ஒரு ஸ்திரீயின் மானத்தையழித்ததற்காக அவர் அவனைத் தண்டித்தார். அவருடைய பார்வை கவரத்தக்கதாக இருந்த தால் வீரர்கள் மஹாராஜருக்காக உயிரைத் துரும்பென்று எண்ணிப் போரிட்டனர். அவருடைய சேனுபதியாகிய நேடா

ஜியின் பெருமையைக் கூறுவது அசாத்தியமானது. அவர் தமது வாழ்நாளைக் குதிரையின்மேலேயே கழித்தார். அவர் செல்லும் இடமெல்லாம் அவருடைய பிரசித்திபெற்ற குதிரைப்படை பின்தொடர்ந்தது. அவருடைய ஒற்றர்கள் ஆங்காங்கு நடக்கும் விஷயங்களை வாயுவேகமாக வந்து தெரிவித்தார்கள். அவருடைய சமயோசித அறிவும், தந்திரமும் சுறுசுறுப்பும் மனோதிடமும் ஒருவருக்கும் அவ்வாறு அமையா. சமஸ்தானத்திலுள்ள குடிகள் அவரைத் தெய்வமென்றே எண்ணினர். அவருடைய அரசாங்க அமைப்பும் உத்தியோகங்களுக்குத் தகுந்த திறமையாளரைப் பொறுக்குந்திறனும் நிகரற்றவை; ஆழ்ந்துபார்த்தால் ஐரோப்பாவில் மிகுந்த புகழ் பெற்ற மகாபுருஷரான நெப்போலிய சக்கரவர்த்தியும் சிவாஜி மஹாராஜருக்கு இணையாகார்.

---

## 3. சீனம்.

சீனா ஆசியாவிலுள்ள புராதன நாடுகளிலொன்று. இந்தியாவைப்போன்று அந்நாடும் தொன்றுதொட்டே நாகரீகம் பொருந்தியுள்ளது. நாம் தரிக்கும் பட்டு வஸ்திரங்கள் முதன் முதலில் சீனர்களாலேயே செய்யப்பட்டன. போரிற் பயன் படும் வெடிமருந்தும் சீனர்களாலேயே கண்டுபிடிக்கப்பட்டது. ஐரோப்பாவில் அச்சுத்தொழில் ஏற்படும் முன்பே சீனர்கள் தமது நூல்களை அச்சிலேற்றினர். மேனாடுகள் காடடர்ந்து அங்குள்ள மாந்தர் வனவிலங்குகளைப்போல் திரிந்தபொழுது சீனாவில் பெரிய நகரங்களும் கோட்டைகளும் பொலிந்தன. கவிஞர்களும் கலைஞர்களும் அக்காலத்தில் நிகரற்று விளங்கினர்.

இத்துணைப் பெருமை வாய்ந்த சீனம் இயற்கை யமைப்பிலும் நிகரற்றது. அதன் மலைகளும் நதிகளும் இணையில்லா

தவை. அங்கு எல்லையற்ற உலோகப் பொருள்களும் கிடைக்கின்றன. சீனாவில் அகப்படும் கரி உலகத்திற்கே ஓராயிரம் ஆண்டுகள்தோறும் போதும் என்று கணக்கிடப்படுகிறது. ஆறுகளில் எப்போதும் பண்டங்களை ஏற்றிக்கொண்டு படகுகள் இங்குமங்குஞ் செல்லுவதைப் பார்ப்பது அழகாகவிருக்கும். யாங்ஸிகியாங்கும் மஞ்சளாறும் ஆறுகளிற் பெருமை வாய்ந்தன. மஞ்சளாறு மஞ்சள் நிறமுள்ள நீரைக் கொணர்ந்து கடலில் புகுவதால் ஆறுவிழுமிடத்திலுள்ள கடலும் அந்நிறம் அமைந்து மஞ்சட்கடல் எனப் பெயர் புனையும். சீனாவின் ஜனத்தொகையும் எல்லையற்றது. மாந்தர்கள் வளமுள்ள நிலத்தில் வேளாண்மை செய்தும், வாணிகம் புரிந்தும், மீன் பிடித்தும் இன்னும் பல தொழில்களைச் செய்தும் வாழ்க்கை நடத்துகிறார்கள்.

சீனமொழியும் மிகவும் புராதனமானது. எழுத்துக்கள் பலவாதலின் அம்மொழியைக் கற்றல் எளிதன்று. பண்டைக் காலத்திலேயே எழுத்துக்கள் அச்சில் ஏறிவிட்டமையாலும் அவர்கள் நாட்டைப் பிறர்கள் கைக்கொண்டு குடியேறாமையாலும் மொழியிற் சிறிதும் மாறுபாடு உண்டாகவில்லை. சீனர்களுக்குப் பெண் குழந்தைகளிடத்தில் அதிக திருப்தி கிடையாது. பெண்கள் அயலாருக்கு வாழ்க்கைப் படவேண்டியிருப்பதாலும் தங்களுக்கு வேலை செய்யப் பயன் படாததாலும் அவர்கள் பெண்களை வெறுக்கிறார்கள். பெண்களுக்கு ஐந்து அல்லது ஆறு வயதானதும் அவர்களின் விரல்களைக் கட்டிவிடுவது வழக்கம். காற்கட்டைவிரலை மட்டும் விட்டு விட்டுப் பிறவிரல்களை உள்ளங் காலோடு சேர்த்து இறுக்கிக் கட்டிவிடுவதால் பெண் குழந்தைகள் அல்லலுறும். பெண்களுக்குப் பதினைந்து வயது ஆவதற்குள் மணஞ் செய்

விப்பது வழக்கம். மணம் நடக்கும்பொழுது பெரிய விருந்து கள் நடக்கும். பிள்ளை வீட்டார் பெண் வீட்டாருக்கும் பெண் வீட்டார் பிள்ளை வீட்டாருக்கும் வெகுமதிகள் அனுப் புவார்கள். ஏழைக்குடும்பங்களில் பெண்களைச் சிறுவயதி லேயே விற்று விடுவதுண்டு. ஆண் பிள்ளைகள் கல்வி கற்றுப் பல கலைகளிலும் வல்லுநராகப் பள்ளிக்கூடங்கட்குச் செல் வார்கள்.

சீனர்களுக்குள் புதுவருஷக் கொண்டாட்டம் என்பது பெரிய திருநாள். அன்று யாவரும் நல்லுடைதரித்து விருந் துண்டு தங்கள் காலத்தை மகிழ்ச்சியுடன் கழிப்பார்கள். முன் காலத்தில் இருப்புப்பாதைகள் இல்லாமையாலும், வியாபாரம் ஆற்று மார்க்கமாக நடந்ததாலும், சீனாவிலுள்ள நகரங்கள் பெரும்பாலும் ஆற்றோரங்களிலேயே ஏற்பட்டன. நகரத்தி னருகில் ஆறுகள் முழுவதும் படகுள் நிரம்பியிருக்கும். படகோட்டிகள் தங்கள் குடும்பங்களுடன் படகிலேயே வசிக் கிறார்கள். படகின் ஒருபுறம் வெயிலினின்றும் மழையினின் றும் மறைக்கப்படுகிறது. படகுகளிலிருந்து குழந்தைகள் நீரில் விழுந்து இறவாதவாறு, குழந்தைகளின் இடைகளில் கயிறுகள் கட்டப்படுகின்றன. நகரங்களிலுள்ள வீதிகள் மிகவும் குறுகியன. கடைத்தெருவில் ஒவ்வொரு பண்டமும் ஒவ்வொரு இடத்தில் விற்கப்படும். பலவிதத் தொழிலாள ரும் தங்கள் தங்கள் தொழில்களைச் சுறுசுறுப்பாகச் செய்து விற்பனை செய்கிறார்கள். தச்சர், கொல்லர், சிற்பிகள், சேணி யர் தட்டார் முதலியோர் நேர்த்தியான பொருள்களைச் செய் வது காட்சிக் கினியதாக விருக்கும். இளைஞர்கள் நீண்ட அங்கிகளை யுடுத்திக்கொண்டு தாங்கள் படித்தவர்கள் என்ற செருக்குடன் நகரங்களின் ஒரு புறத்திலிருந்து மற்றொரு

புறஞ் செல்வார்கள். பிச்சைக்காரர்கள் கூட்டங் கூட்டமாக கடைகளுக்குச் சென்று பிச்சை வாங்குவது வழக்கம். அவர்களுடைய உபத்திரவத்தினின்று பாதுகாத்துக்கொள்ள சிலர் பிச்சைக்காரர் தலைவர்களுக்கு வரிகொடுத்து விடுவதுண்டு. வரிகொடுப்பவர்களிடம் பிச்சைக்காரர் செல்வதில்லை.

நகரங்களிலுள்ள நாய்கள் சிறப்பானவை. ஒவ்வொரு தெருவிலும் பன்னிறம் வாய்ந்த நாய்கள் திரிந்துகொண்டிருக்கும். நாம் அவற்றைத் தடிகொண்டு வெருட்ட முயன்றால் அவை நம்மீது பாயும். அவைகள் கற்களுக்கே அஞ்சும். நாய்களோடு தெருவில் பொறுக்கித்தின்று உயிர் வாழ்பவை பன்றிகளாம். ஆனால் பன்றிகள் வளர்க்கப்படுகின்றன. வளர்ப்பார்கள் அவைகளைத் துரத்திக்கொண்டு தங்கள் வீடுகளுக்குச் செல்வதுமுண்டு. ஒவ்வொரு வீட்டிலும் கோழிகளும் வளர்க்கப்படுகின்றன. வீட்டிற்குள் பூனைகள் கட்டுண்டு இருக்கும். அவைகள் வீடுகளில் அகப்படும் எலி முதலியவற்றைத் தின்று ஜீவிக்கும். வீட்டுக்காரர்கள் அவைகளுக்குச் சோறளிப்பதில்லை. கிராமங்களில் புலிகள் சஞ்சரிப்பதுண்டு. அவை நாய்களையும் பூனைகளையும் பிடித்து உண்ணும். ஆனால் மனிதனை ஒருமுறை உண்டுவிட்டால் அவைகள் மனிதர்களைக் கொல்வதிலேயே திருஷ்டியாக இருக்கும். சீனர்கள் புலிகளைப் பிடிப்பதற்குப் பொறிகள் வைப்பதுண்டு. பொறிகள் மரத்தினாலேனும் கல்லினாலேனும் செய்யப்படுகின்றன.

சீனாவைப்பற்றிப் படிக்கும்பொழுது அதன் வடபக்கத்திலுள்ள பெருஞ்சுவர் யாவருடைய ஞாபகத்திற்கும் வரும். ஷீ என்ற சீனவல்லரசர் பகைவர்கள் தம்நாட்டிற்கு வருவதைத் தடுக்க அச் சுவரைக் கட்டியுள்ளார். ஒரு மலைத்தொடரின்

உச்சியில் ஏறக்குறைய முப்பதடி உயரத்தில் ஆயிரத்தைந்நூறு மைல் (Miles) நீளமாக அது அமைந்துள்ளது. அதன் நடுவில் கோபுரங்கள் அழகாகத் தென்படும். ஷீசக்கரவர்த்தி காலத்தில் தார்த்தாரியர்களின் தொல்லை சீனுவுக்கு அதிகமாக விருந்தது. ஆதலால் சக்கரவர்த்தி தேசத்திலுள்ள குடிகள் அனைவரையும் அச் சுவர்கட்டும் வேலையில் கட்டாயப்படுத்தியமர்த்தினன். அங்கு வேலைசெய்து திரும்பிவந்தவர் சிலரே. பெரும்பான்மையோர் அங்கேயே தம்முயிரைவிடும்படி நேரிட்டது. ஆனுல் ஷீசக்கரவர்த்தியின் எண்ணம் நிறைவேறவில்லை. அவனுக்குப் பிறகு ஆயிரம் ஆண்டுகள் கடந்தபின்னர் தார்த்தாரியர்கள் சீனுவைப் படையெடுத்து அதனைக் கைக்கொண்டு அரசாண்டனர்.

தார்த்தரியர்கள் தமது ஆட்சியில் நாட்டிற்கு ஒரு பெரும் நன்மை செய்திருக்கின்றனர். குபிலைகான் என்ற தார்த்தாரிய அரசன் நாட்டில் தெற்கு வடக்காக ஒரு பெருங்கால்வாய் வெட்டுவித்தான். அது எண்ணூறுமைல் (Miles) நீளத்துடன் தக்ஷிண தேசத்துப் பட்டினங்களையும் வடநாட்டு நகரங்களையும் பிணைக்கின்றது. அக்கால்வாயில் எண்ணிறந்தபட்டுகள் வாணிகப் பொருள்களுடன் இங்கும் அங்கும் சென்றன.

சீனுவிலுள்ள நகரங்களில் அவற்றிலமைந்த கோயில்களே உயர்ந்த கட்டிடங்கள். கோபுரங்கள் சிற்பத் தொழிலமைந்தனவாயிருக்கும். காண்டன் என்ற நகரத்திற்கு அப்பால் 'சவநகர்' என்ற இடம் உண்டு. சீனுநகரங்களில் அச் சவநகரே பரிசுத்தமுள்ளதாய்த் தென்படும். அமைதியே எங்கும் நிலவியிருக்கும். தெருக்கள் மனிதசஞ்சார மற்றனவாய் இடையிடையே சட்டிகளில் வளரும் செடிகளையுடையன வாயிருக்கும். மறுகுகளின் இருபக்கங்களிலும் ஒற்றை அறைகளோடு

கூடிய சிறு வீடுகள் தோன்றும். வீட்டின் முன்புறத்தில் ஒரு மேஜையும் அதன் பின்னர் ஒரு திரையும் இருக்கும். திரையினருகில் காகிதத்தாலும் சுண்ணங்களாலும் அமைக்கப்பட்ட பதுமைகள் உயிர் வாய்ந்த பணியாளரைப்போல் நிற்கின்றன. பதுமைகளின் அருகில் சவப்பெட்டிகளிருக்கின்றன. இறந்தாருடைய சுற்றத்தார் அச் சவப்பெட்டிகளினிடம் வந்து துக்கங்கொண்டாடுவது வழக்கம். பல மாதங்கள் துக்கக் கொண்டாட்டம் செய்த பிறகு பெட்டிகள் அடக்கஞ் செய்யப்படுகின்றன. சீனர்களுக்குள் வைத்தியமுறை நன்றாக மேலோங்கவில்லை. ஐரோப்பிய பாதிரிமார்கள் நாடெங்கும் பல வைத்தியசாலைகளை ஏற்படுத்தி ஜனங்களுக்குப் பேருதவி செய்கின்றனர். சீனர்களிற் பலரும் மேனாட்டு வைத்திய முறையைக் கற்றுக்கொண்டு வைத்தியம் செய்கிறார்கள்.

சீனர்கள் மூன்றுமதங்களை அநுஷ்டிக்கிறார்கள். பௌத்தாலயங்களின் தொகை எண்ணிறந்தது. பள்ளிக்கூடங்களில் கன்பூஷியஸைஜனங்கள்வணங்குகிறார்கள் ஆபத்துக்காலங்களில் டேயூவின் உதவியை நாடுகிறார்கள். ஆகவே புத்தமதம் கான்பூஷியான்மதம்டேயூமதம் முதலிய மூன்று மதங்களும் அங்கு நிலவி வருகின்றன. புத்தர் நமது நாட்டிற் பிறந்தவர். அவருடைய மதம் சீனவில் வேரூன்றியுள்ளது. கான்பூஷியஸ் ஒரு சீனப் போர்வீரருடைய பிள்ளை. அவருடைய தகப்பன் கான்பூஷியஸின் இளவயதிலேயே இறந்துவிட்டனர். அவருடைய தாயார் அவரைப்படிப்பில் மேன்மை பெறும்படி செய்தாள். கல்வியில் அவர் நிகரற்றவரானார். அவருக்குப் பண்டைக்காலத்து நாகரீகத்திலும் பழக்கவழக்கங்களிலும் மிகுந்த பற்று உண்டு. அவர் ஜனங்களுக்குச் சன்மார்க்கங்களையும் பழைய காலத்துப் பெருமையையும் போதித்து வந்தார்.

அரசாங்கத்தார் அவருடைய பெருமையையும் கல்வியையுங் கருதி அவருக்கு அமைச்சர் பதவியை யளித்தனர். அவருடைய ஆட்சி நீதி பொருந்தியதாயிருந்தது. ஆனால் அவர் நெடுங்காலம் இராஜசேவையிலில்லை. அவருக்குப் பலரும் சீடராயினர். ஆனால் அவருடைய பெருமையும் புகழும் அவர் காலத்திருந்த டேவூ என்ற சிறுவரிடத்தில் தடைப்பட்டன. கான்பூஷியஸ் இறுத்த கேள்விகளுக்கு டேவூ அளித்த விடைகள் அழுத்தமானவை. டேவூவின் விடைகளைக் கேட்ட கான்பூஷியஸ் அவரை ஒரு பெரியவர் என்றும் அவரைக் கண்டு யாவரும் அஞ்சவேண்டும் என்றுங்கூறினர். இவ்விரு பெரியார்களும் இன்றும் சீனர்களின் உள்ளத்தில் நிலவி வருகின்றனர்.

தற்காலத்தில் சீனாவில் ஒரு புகழ்பெற்ற உத்தமர் தோன்றினர். சாங்கீடங் என்ற பெயர்பூண்ட அவ்வுத்தமர் சீனாவில் புத்துயிரை யுண்டாக்கினர். சீனர்களிடத்தில் கெட்ட பழக்கமாகிய அபின் அருந்தல் ஒழியவேண்டுமென்றும் பெண்களின் விரல்களைப் பிணித்தல் தவறென்றும் அவர் போதித்தார். சீனாவில் வியாபாரத்தை யொட்டி ஐரோப்பியர் பலரும் பலவிடங்களில் தங்கியிருக்கின்றனர். பாதிரிமார்களும் கிறிஸ்துவ மதப்பிரசாரம் செய்ய ஏராளமாக அங்கு வசிக்கின்றனர். ஐரோப்பியர்களைக் கண்டு பயந்த சீனர்கள் பலரும் அவர்களைத்துரத்த எண்ணங்கொண்டு கொலைகள்செய்தும் கொள்ளையடித்தும் வந்தனர். கொஞ்சகாலத்தில் சீனர்களின் தொல்லை நீங்கியது. சீனர்களும் மேனாட்டு நாகரீகத்தில் நம்பிக்கை வைத்துத் தம் நாட்டை விருத்தி செய்கின்றனர். ஆண்டுதோறும் தபாற்சாலைகளும் இருப்புப்பாதைகளும் புதிதாக ஏற்படுத்தப்படுகின்றன. பெண்களுக்குக் கலாசாலைகள் பல

தோன்றுகின்றன. சீன வாலிபர்கள் அயல்நாடு சென்று கல்வியபிவிருத்தி செய்து கொள்கின்றனர். சீனச் சேனையும் மேனாட்டு முறையிற் பழக்கப்படுகிறது. சிறிது காலத்தில் சீனாவும் தனக்கடுத்த ஜப்பானைப்போல முன்னேற்ற மடைந்து விடும்.

---

## 4. சூதாடல்.

1. காதல் கவருடல் கள்ளுண்டல் பொய்மொழிதல
 ஈதல் மறுத்தல் இவைகண்டாய்—போதிற்
 சினையாமை வைகும் திருநாடா! செம்மை
 நினையாமை பூண்டார் நெறி.

2. அறைத்தை வேர்கல்லும் அருநரகிற் சேர்க்கும்
 திறத்தையே கொண்டருளைத்தேய்க்கும்–மறத்தையே
 பூண்டு விரோதம் செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
 தீண்டுவரோ என்றார் தெரிந்து.

3. உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
 திருவழிக்கும் மானம் சிதைக்கும்—மருவும்
 ஒருவரோடு அன்பழிக்கும் ஒன்றல்ல சூது
 பொருவரோ தக்கோர் புரிந்து. (நளவெண்பா)

4. சீல நற்றருமம் மெய்சிதைக்கும் தெண்டிரை
 வேலை முற்றிரு நிலக்கிழமை வீழ்த்திடும்
 மானுறுத்திடும் கவருடல் மன்ன கேள்!
 கோலிழுக்கு அரசர்தங் கொள்கைத் தென்பவே.

5. கள்ளுண விரும்புதல் கழகம் சேர்தல்மால்
 உள்ளுறப் பிறர்மனை நயத்தல் ஒன்னலர்க்

கெள்ளரு ஞாட்பினுள் இரியல் செய்திடல்
வள்ளியோய் அறநெறி வழுக்கும் என்பவே !

6. ஐய நீ ஆடுதற்கு அமைந்த சூதுமற்
றெய்தும் நல்குரவினுக்கு இயைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக்குறுபகை என்பர் மேலையோர் !

7. எள் ளுகசூதினை இகலி வென்றதூஉம்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற அமைத்திடும் உண்மை ஓர்கிலாப்
புள்ளினம் அருந்தின போலும் என்பவே ! (நைடதம்)

---

## 5. பூமி.

நாம் வசிக்கும் பூமி பார்வைக்கு ஒரு தட்டையான நில மென்று காணப்படுகின்றது. சூரியனும் சந்திரனும் நக்ஷத் திரங்களும் நாடோறும் பூமியைச் சுற்றிக்கொண்டு இரவு பகலை யுண்டாக்குகின்றன. ஆனால் உண்மையாராயின் இவ்விரு கொள்கைகளும் முரண்படுகின்றன. நாம் பூகோள சாஸ்திரத் தில் பூமி உருண்டை வடிவ முடையதென்று படித்திருக்கி றோம். கடற்கரையினின்றுபார்த்தால் அதனருகிலுள்ள ஒரு மரக்கலத்தின் முழுவடிவமும் நமக்குத் தோன்றும். அக் கலம் கரையினின்று கடலூடு செல்லச் செல்ல மறைந்து கொண்டே வருகிறது. பூமி தட்டையாக விருக்குமேயானல் மரக்கலத்தின் உறுப்புக்கள் எங்ஙனம் மறையும்? சிறிது நேரஞ் சென்றபின் அஃது காட்சிக்குப் புலனாகவில்லை. ஆத லால் பூமி உருண்டை வடிவமா யிருக்கின்றதென்று நாம் அறிதல் கூடும். ஒரு பந்தின் உச்சியிலுள்ள எறும்பு முத

வில் பார்வைக்கு நன்ருய்ப் புலப்பட்டாலும் கீழே செல்லச் செல்ல மறைந்து கொண்டே செல்கிறது. ஆனால் தட்டையான விடத்திற் செல்லும் எறும்பு அவ்வாறு மறையவில்லை. பந்து உருண்டையானதால் அவ்வாறு நிகழ்கிறது. இவற்றை யொத்த உதாரண முகத்தான் பூமி உருண்டை வடிவம் பெற்ற தென்பது அறியத்தக்கது.

பூமி சூரியனைச் சுற்றி வருகின்றதென்பதும் புதுமையாகத் தோன்றும். நாம் விரைவாகச் செல்லும் ஒரு இருப்புப் பாதை வண்டித்தொடரிற் செல்லும்பொழுது பக்கத்தி லுள்ள மரஞ்செடிகள் ஓடுவது போலவும் வண்டி ஒரே நிலையி லிருப்பதுபோன்றுந் தோன்றும். ஆனால் வண்டியோடுவதே யுண்மை. அதை யொப்ப பூமி சுற்றுகிற வேகத்தில் சூரியன் முதலியவை ஓடுவது போன்றும் பூமி ஒரே நிலையிலிருப்பதாக வுமே தோற்றுகிறது. பூமி தன்னைத்தானே சுற்றிக்கொண்டு சூரியனைச் சுற்றுகிறது. தன்னைத்தானே சுற்றிக்கொள்ள பூமிக்கு ஒருநாள் செல்லும். அவ்வாறு நிகழும்பொழுது சூரிய னுக் கெதிரிலிருக்கும் பக்கத்தில் பகலும் மறைவாகப் பின் புறத்திலுள்ள பக்கத்தில் இரவும் தோன்றுகின்றன. பூமி ஒரு நிமிஷத்திற்கு 18 மைல் வீதம் செல்வதாகக் கணக்கிடப்படு கிறது. பூமிக்குச் சூரியனை ஒருமுறை சுற்றிவருவதற்கு 365¼ நாட்கள் செல்லும். ஆதலால் நாம் 365¼ நாட்களை ஒரு வருஷமாகக் கணக்கிடுகிறோம். பூமியைக் குறுக்காக அளக் குங்கால் நீளத்தில் 7925½ மைல்களும் அகலத்தில் 7899 மைல்களும் இருக்கின்றன. சூரியனைச் சுற்றிவருகிற காரணத் தால் பூமியிற் பருவநிலைகள் மாறுபடுகின்றன.

நாம் பகலில் எவ்வாறு பொருள்களைப் பார்க்கிறோம்? பூமியைச் சுற்றியுள்ள ஆகாயம் தன்னிடத்தில் வீசும் சூரிய

கிரணங்களை நாலாபக்கங்களிலும் பிரதிபிம்பிக்கும்படி செய்கின்றது. அவ்வாறு பிரதிபிம்பம் உண்டாவதால் பொருள்கள் கண்ணுக்குப் புலனாகும். ஆகாயமில்லாவிட்டால் பிரதிபிம்பமும் ஏற்படாது. பகலும் இரவாகவேயிருக்கும். ஆகாயத்தில் தோன்றும் நீலநிறமும் அஸ்தமன காலத்தில் தோன்றும் பலவித நிறங்களும் ஆகாயத்தில் வீசுகின்ற சூரியவொளியின் பிரதி பிம்பத்தினாலேயே யேற்படும். ஆகாயம் பூமிக்கு மற்றொரு விதத்திலுதவுகிறது. உடலின் வெப்பத்தை மேலேயுள்ள கம்பளம் விடாமற் காப்பது போலப் பூமியின் வெப்பத்தையும் ஆகாயம் காப்பாற்றுகிறது. ஆகாயம் இல்லாவிட்டால் பூமியில் நாம் வசிப்பதே இயலாததாகிவிடும்.

கிரகங்களுக்குப் பொருள்களையிழுக்கும் வன்மையுண்டு. பூமியிலுள்ள ஜலபாகத்தை அதன் அருகிலுள்ள சந்திரன் இழுக்கின்றது. ஆதலால் சந்திரனை நோக்கிக் கடல் நீர் எழும்புகிறது. சந்திரன் இடம்விட்டு இடம் பெயர்வதால் நீரினெழுச்சியும் மாறுபடுகிறது. ஆதலால் நீரிற் பெரும்அலைகள் கிளம்பி இங்குமங்கும் வீசுகின்றன. சூரியன் பூமியினிடமிருந்து வெகு தூரத்திலிருப்பதால் அது கடனீரை அவ்வாறு இழுக்க முடியவில்லை. ஆனால் சூரியனாலும் சமுத்திர ஜலம் சிறிது அலைபடுறது. சூரியனும் சந்திரனும் இருக்கின்ற நிலை சமமாகவிருப்பின் இருகிரஹங்களின் வன்மையாலும் சமுத்திரத்தில் பெரும் அலைகளுண்டாகின்றன. அமாவாசையின் பொழுதும் பௌர்ணமியின் பொழுதும் பெரும்அலைகள் உண்டாகின்றன. சூரியனும் சந்திரனும் உள்ள நிலை வேறுபட்டிருப்பின் அலைகள் குறையும். ஏனெனில் சூரியன் நீரை ஒரு புறத்தில் இழுக்கவும் சந்திரன் அதனை எதிர்ப்புறம் இழுக்கவும் நீர் சம நிலையை யடைந்து அலைகளும் குறைகின்றன.

பூமியில் எவ்வாறு கிரஹணங்கள் உண்டாகின்றன? கிரஹணங்கள் என்பவை சூரிய சந்திரருடைய மறைவாகும். சூரியனுக்கு இயற்கையிலேயே ஒளியைத்தரக்கூடிய வன்மையுண்டு. அதற்கு இயற்கை யொளியும் இருக்கிறது. ஆனால் சந்திரனுக்கு இயற்கையொளி கிடையாது. சூரிய வொளி சந்திரன்மேல் வீசி சந்திரன் அவ்வொளியைப் பூமிக்குப் பிரதி பிம்பிக்கும்படி செய்கிறது. சந்திரன் பூமிக்கும் சூரியனுக்கும் இடையில்வரின் சூரிய வெளிச்சம் மறைந்து சூரிய கிரஹணம் உண்டாகிறது. பூமி சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் வரின் சூரியனுடைய ஒளி சந்திரன்மேல் வீசாமல் மறைந்து சந்திரனுக்கு ஒளி வீசும் வன்மை போய்விடுகிறது. அப்பொழுது சந்திரகிரஹணம் உண்டாகும். சந்திரன் பூமியைச் சுற்ற சுமார் 29 நாட்கள் ஆகின்றன. ஆதலால் சந்திரன் பூமிக்கும் சூரியனுக்கும் இடையில் ஒரு முறையும் பூமி சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையில் ஒரு முறையும் ஒரு மாதத்தில் வருகின்றன. ஒவ்வொரு அமாவாசையின் பொழுதும் பௌர்ணமியின் பொழுதும் கிரஹணங்கள் சம்பவிக்க நேரிடும். ஆனால் பூமியும் சந்திரனும் நகர்ந்துகொண்டே வருவதால் பூமி சந்திரன் சூரியன் முதலிய மூன்றும் ஒரே சமயத்தில் ஒரே சமநிலையில் அமாவாசையின் பொழுதும் பௌர்ணமியின் பொழுதும் இருக்க நேரவில்லை. சமநிலை சிறிது குறையினும் கிரஹணம் ஏற்படாது. ஆதலால் கிரஹணங்கள் மாதந்தோறும் நிகழவில்லை. சூரிய கிரஹணத்தின் பொழுது பூமி முழு வொளியும் குறைவதுமில்லை. சூரிய கிரஹணத்தின் பொழுது சூரியனைச் சந்திரன் மறைக்கின்றதே யொழிய அதன் பிரகாசம் மறைகிறதில்லை. பூரணகிரஹணங்கள் நிகழாமல் குறை கிரஹணங்களும் ஏற்படும். மூன்று கிரகங்களின் நிலை

யைப் பொறுத்தே கிரஹண நிகழ்ச்சியும் இருக்கும். ராகு கேதுக்கள் சூரிய சந்திரர்களை விழுங்குவதால் கிரஹணங்கள் ஏற்படுகின்றன வென்பது ஹிந்துக்களுடைய கொள்கை. நாம் பூமியின் நிலையையும் பிற கிரஹங்களினால் அதில் ஏற்படும் மாறுபாடுகளையும் ஒருவாறு அறிந்து கொண்டோம்.

---

## 6. ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும்.

புலவர் திலகராகிய ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும் சற்றேறக்குறைய ஆயிரத்தைம்பது வருடங்கட்கு முன்னர் தமிழ் நாட்டில் விளங்கி வந்தனர். வெண்பாவிற் புகழேந்தி கோவையுலா வந்தாதிக்கு ஒட்டக்கூத்தர் என்ற பழமொழியினின்று அவர்களுடைய கல்வித்திறமும் கவித்திறமும் இத்துணைப் பெருமை வாய்ந்தவை யென்று விளங்குகின்றன. அன்னோர் அரச ரவைக்களங்களில் முதன்மை பெற்று அரசருக்குப் பிரியாத் தோழராயும் இருந்தனர். கல்வித் தேர்ச்சியைப் போலவே அவர்களுடைய தெய்வ பக்தியும் எல்லையற்றது. கவிவன்மையும் கடவுளருளையுங் கொண்டு அவர்கள் உலகமெங்கும் ஒருகுடை நிழற்றி உயர்நிலை வாய்ந்த மன்னர் தலைவரையும் பொருளென மதியாது போற்றியும் தூற்றியும் வந்தனர். அங்ஙனம் பெருமை வாய்ந்த புலவர் திலகரும் அழுக்காறுற்று அல்லலடைந்தனர்!

புகழேந்தி தொண்டை மண்டலத்தில் உள்ள பொன் விளைந்த களத்தூரிற் பிறந்தவர். கல்வி கேள்விகளின் மேன்மையைக் கண்ட பாண்டியமன்னன் அவரைத் தனது அவைக் களத்திற்கு ஆபரணமாகச் செய்தான். ஒட்டக்கூத்தரும் சோழர் அவையில் முதன்மை பெற்று விளங்கினார். அப்பொ

மூது சோழ நாட்டிற்குப் புரவலனானவன் குலோத்துங்கச் சோழன். குலோத்துங்கன் பாண்டியனுடைய பெண்ணை மணக்க விரும்பி தனது புலவராகிய ஒட்டக்கூத்தரைப் பாண்டியனிடம் அனுப்பினான். புலவரும் சோழனுடைய பெருமையைப் பலவாறு புகழ்ந்து கூறி அவன் பாண்டியருக்குத் தகுந்த மருமகனாகும் தகுதி பெற்றவனென்று கூறினர். பாண்டியமன்னன் சோழனுடைய பெருமையை உணர்ந்தவனேனும் பரிகாசமாகத் தனக்குச் சோழன் தகுதியுள்ளவன் அல்லனென்று கூறினான். கூத்தருக்கு வெகுளி மிக்கெழுந்தது. அவர் உடனே சோழனைப் புகழ்ந்தும் பாண்டியனை யிகழ்ந்தும் பின்வரும் பாடலைக் கூறினர்.

'கோரத்துக் கொப்போ கனவட்டம் அம்மானே!
கூறுவதும் காவிரிக்கு வையையோ அம்மானே!
ஆருக்கு வேம்புநிக ராகுமோ அம்மானே!
ஆதித்தனுக்கு நிகர் அம்புலியோ அம்மானே!
வீரர்க்குள் வீரன்ஒரு மீனவனோ அம்மானே!
வெற்றிப் புலிக்கழகு மீன்கொடியோ அம்மானே!
ஊருக்குறந்தை நிகர் கொற்கையோ அம்மானே!
ஒக்குமோ சோணாட்டைப் பாண்டி நாடம்மானே!

உடனே பக்கத்திலிருந்த புகழேந்தி எழுந்து,

ஒரு முனிவன் நேரியிலோ உரைதெளித்தது அம்மானே!
ஒப்பரியதிரு விளையாட்டு உறந்தையிலோ அம்மானே!
திருநெடுமால் அவதாரம் சிறுபுலியோ அம்மானே!
சிவன்முடியில் ஏறுவதும் செங்கதிரோ அம்மானே!
கரையெதிரல் காவிரியோ வையையோ அம்மானே!
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ அம்மானே!

பரவை பணிந்ததும்சோழன் பதந்தனேயோ அம்மானே!
பாண்டியனுர் பராக்கிரமம் பகர்வரிதே அம்மானே!

என்று கூறினுர். கூத்தரும்

வென்றிவளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக்கிடான் கவசம்—துன்னும், என வாயெ

டுத்து மேலே கூறமுடியாமல் சற்று ஆலோசனை செய்தார். ஆனுல் புகழேந்தி உடனே

'வெறியார் தொடைகமழும் மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கின் என்று.' என அப்பாடலை

முடித்தனர்.

அரசனுடைய விளையாட்டுப் பேச்சு இருபுலவர்களுக்கும் பகைமையை விளைவித்துவிட்டது. புரவலன் புலவரை அடக்கிப் பெண்கொடுக்க நிச்சயித்தான். மணமும் நடந்தேறியது. அரசன் தன் பெண்ணுடன் விலையுயர்ந்த பல சீதனங்களையும் புகழேந்திப் புலவரையும் சோழநாட்டிற்கு அனுப்பினுன்.

ஒட்டக்கூத்தருக்குச் சோழனிடத்தில் குறையாத செல்வாக்குண்டு. புகழேந்தியின் மீது பொருமைகொண்ட கூத்தர் புகழேந்தியைச் சிறையில் அடைப்பித்தார். நாடோறும் ஆழாக்கரிசியும் உழக்கு உப்புமே சிறையிலுள்ள புலவருக்குக் கொடுக்கப்பட்டன. புகழேந்தி சிறையிலிருந்த வண்ணமே சிறைச்சாலைச் சாளரத்தின் வழியாகச் செல்லும் பெண்களுக்கு நற்புத்தி புகட்ட வெண்ணிப் பல கதைகளை எளிய செய்யுள் நடையிலியற்றி உபதேசஞ் செய்தனர். அவற்றைக் கேட்ட பெண்மணிகள் தத்தம் இல்லங்களினின்று வேண்டிய உணவைப் புலவருக்குக் கொண்டு கொடுத்தனர். அல்லியரசாணிமாலை, பவளக்கொடிமாலை, புரந்தரன் களவுமாலை

முதலியன புகழேந்தி சிறையில் இயற்றியவைகளிற் பெருமை வாய்ந்தவை. புகழேந்தி சிறையில் தம்முடன் இருந்தவர் பலருக்கும் வித்தை கற்றுக்கொடுத்து அவரையும் புலவராகச் செய்து ஒட்டக்கூத்தருடைய கர்வத்தைப் பங்கப்படுத்தினர்.

இவற்றையெல்லாம் அறிந்த அரசி சினங்கொண்டு அரசனிடத்தில் வெறுப்புற்றுப் புகழேந்தியை விடுவித்தாலொழியத் தான் அரசனுடன் பேசுவதில்லை என்று கூறினள். அரசன் அவள் சினத்தைத் தணிக்கவேண்டியும் புகழேந்தியை அல்லற்படுத்துவது அடாத செய்கையெனத் துணிந்தும் அவரை விடுவித்தான். புகழேந்தி சந்திரன் சுவர்க்கி என்ற ஒரு சிற்றரசனை யடுத்து அவனுடைய வேண்டுகோளால் நளவெண்பாவை இயற்றினர். நளவெண்பாவின் சொன்னயம் பொருணயங்களை யறிந்த கூத்தருக்கு மீண்டும் வெறுப்பு மிகுந்தது. புகழேந்தி கூத்தரிடஞ் சினங்கொண்டு அவரைக் கொல்லவெண்ணி அவர் வீட்டில் ஒளிந்திருந்தார். இரவு நெடுநேரம் ஆயிற்று. கூத்தர் சோறுண்ணவில்லை. அவருடைய மனைவிபால் கொணர்வதாகச் சொல்லக் கூத்தர் தாம் வயிற்றுவலியால் வருந்துவதாகவும் அவ்வலியைத் தீர்க்கப் புகழேந்தி யியற்றிய நளவெண்பாவின் சாரமே ஏற்றதென்றுஞ் சொன்னர். அதனைக் கேட்டிருந்த புகழேந்தி கூத்தரிடஞ் சென்று அவரைப்பணிந்து 'புலவர் பெருமானே! உங்களுக்கு என்னிடத்தில் உள்ள மதிப்பு இப்பொழுதே தெரியவந்தது. உம்மைக் கொல்லவந்த நான் உமது உள்ளன்பை யறிந்து உம்மைப் பணிகிறேன்' என்றார். உடனே இரு புலவரும் ஒருவரை யொருவர் கட்டித் தழுவித் தமது பகைமையை விட்டு நட்புப் பூண்டொழுகினர்.

---

## 7. கல்வி.

(1) குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு.

(2) இம்மை பயக்குமால் ஈயக்குறை வின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக்—கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து.

(3) களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக்—கொள்வர்
கடை நிலத்தோர் ஆயினும் கற்றுணர்ந்தோரை
தலை நிலத்து வைக்கப்படும்.

(4) வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர் செறின்—வௌவார்
எச்சமென ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சை மற்றல்ல பிற.

(5) கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கில் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகில் தெரிந்து.

(6) தோணி இயக்குவான் தொல்லை வருணத்துக்
காணில் கடைப்பட்டான் என்றிகழார்—காணாய்
அவன்துணையா ஆறுபோய் அற்றே நூல்கற்ற
மகன் துணையா நல்ல கொளல்

(7) தவலரும் தொல்கேள்வித் தன்மை உடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயில் காண்பாம் அகல்வானத்
தும்பர் உறைவார் பதி.

(8) கல்லாரே ஆயினும் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளும் தலைப்படுவர்—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு (நாலடியார்)

(9) கண்ணுடையர் என்பார் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்.

(10) கற்றதனால் ஆய பயன் என் கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

---

## 8. தேக ஆரோக்கியம்.

நாம் இன்பமாக வாழ்வதற்குத் தேகாரோக்கியம் இன்றி யமையாதது. தேகாரோக்கியமின்றிச் சந்தானசம்பத்துக்களும் தீர்க்காயுளும் என்ன பயன்? தேகாரோக்கியம் சுகாதாரமின்றி வராது. சுகாதார விதிகளை அறியாததாலும், அவற்றை அறிந்து கைக்கொள்ளாததாலும் ஆரோக்கியம் குன்றிவிடு கிறது. நோய்களும் மலிந்து துன்பமுற்ற வாழ்க்கையை நடத்த நாம் ஆளாகின்றோம். பிணிகள் மலிவதால் அகால மரணமும் சம்பவிக்கின்றது. இந்தியாவில் ஆண்டுதோறும் பத்துலக்ஷம் ஜனங்களுக்குமேல் விஷபேதி, வைசூரி முதலிய தொத்துவியா திகளால் இறக்கின்றனர். இங்கிலாந்தில் ஒரு நூற்றாண்டுக்கு முன் இருந்த சாவுகளைப்போல் இல்லாமல் இப்பொழுது ஆயிரத்துக்கு இருவர்கூட இறப்பதில்லை. அதன் காரணம்

அவர்கள் சுகாதார விதிகளை அநுஷ்டிப்பதே. ஊண், பானம், வாயு, உடை உறைவிடம், உடம்பு முதலியவற்றில் நாம் எப்பொழுதும் அவ்விதிகளை யனுசரித்தல் வேண்டும்.

நம்முடைய தேகத்திற்கு மூன்றுவிதமான பதார்த்தங்கள் இன்றியமையாதவை. அவைகள்மாமிசத்தைவளர்க்கும் பதார்த்தங்களும், உஷ்ணத்தைக் கொடுக்கும் பதார்த்தங்களும், எலும்பு நகம் முதலியவற்றை வளர்க்கும் பதார்த்தங்களுமாம். நாம் உட்கொள்ளும் உணவில் இம் மூவகைப் பொருள்களும் இருக்கின்றன. நாம் உணவைப் பலவிதமாகப் பக்குவம் பண்ணிச்சாப்பிடுகிறோம். சாப்பாட்டில் அறுசுவைகளையும்சேர்த்து சாப்பிடுவது நமக்கு இயல்பாக இருக்கின்றது. உணவு ஜீரணமாவதற்கு வாயில் எச்சில்நீர் உண்டாவதுஅவசியம்.அறுசுவைகளும் ஜீரண நீர்களை உற்பத்திசெய்வதால் உணவு ஜீரணமாகின்றது. பக்குவம் பண்ணாத பதார்த்தங்களில் கிருமிகள் இருப்பதால் அவற்றைச் சாப்பிட்டவருக்குக் கெடுதல் நேரிடும். அழுகின பொருள்களும் உடம்புக்குத் துன்பத்தைக் கொடுத்துப் பிணியை உண்டாக்கும். கறிகாய்களும் மாமிசங்களும் விரைவிற் கெட்டுவிடும். ஆதலால் அவற்றை உடனே புசித்தல் வேண்டும். இல்லையேல் அவை அழுகாமலிருக்க உப்பிட்டு வற்றல் செய்வது நலம். பால், மாமிசம் முதலியவற்றைக் காற்று நுழையாமல் சிறுபாத்திரங்களில் அடைத்து வைப்பது நலம்.

பெரிய நகரங்களில் உள்ளவருக்கு அடிக்கடி மலச்சிக்கல் ஏற்படுவதுண்டு. குடலின் பலக்குறைவும், ஆகாரக் கெடுதல்களும், கெட்ட பழக்கங்களும் மலச்சிக்கலின் காரணங்களாம். மலச்சிக்கலினால் தலைவலி, வயிற்றுவலி, அஜீரணம் முதலியன

உண்டாகின்றன. தேகப்பயிற்சி இல்லாததாலும் இயற்கைத் தூண்டுதல்களை அடக்குவதாலும் மலச்சிக்கல் ஏற்படுகின்றது. காற்றோட்டமான இடத்தில் தேகப்பயிற்சி செய்வதாலும் பச்சைக் கறி காய், நெய் பழம் முதலியவற்றை ஆகாரத்தோடு சேர்த்துண்பதாலும், சரியான காலத்தில் தூங்குவதாலும் மலச்சிக்கல் ஏற்படாது.

வீட்டினின்று பல குப்பை கூளங்கள் தினந்தோறும் வெளியாகின்றன. குப்பைகள் வீட்டினருகில் இருந்தால் காற்று கெடுவதோடு கிணற்றுநீரும் அசுத்தமாகி உறைவிடம் வாசத்திற்கு விரோதமாக ஆகின்றது. குப்பைகளை நாம் பலவிதமாகப் போக்கலாம். பெரிய நகரங்களில் சாக்கடைகளை வெகுதூரத்தில் கொண்டுபோய் ஆற்றில் விடுகிறார்கள். தெருக் குப்பைகளை வண்டியில் ஏற்றிப் பட்டணங்களுக்கு வெளியில் கொண்டுபோய் எரிப்பதும் உண்டு. இக் குப்பைகளைப் பயிருக்கு எருவாக வயல்களில் போடுவதும் வழக்கம். குப்பைகளை அவ்வாறு வெளிப்படுத்தாவிட்டால் கொசுக்கள் உண்டாகி வியாதி பரவும். இறந்தவர்களைப் புதைப்பதாலும் கீழுள்ள ஜலம் கெட்டுக் கிருமிகளும் உண்டாகின்றன.

நாம் உட்கொள்ளும் காற்றும் சுத்தமாய் இருக்கவேண்டும். நகரங்களில் சீக்கிரம் காற்று அசுத்தப்படுகின்றது. ஜன நெருக்கத்தினாலும், பல தொழிற்சாலைகளாலும், வண்டிகள் ஓடுவதால் உண்டாகும் புழுதியாலும் நகரக்காற்று அசுத்தமடைகிறது. தொத்துவியாதிக் கிருமிகளும் காற்றில் கலந்து நகரமெங்கும் வியாதி பரவுகின்றது.

அதற்காக நகரங்களில் உள்ள வீதிகளில் நீர் தெளித்தும், தார் அடித்தும் புழுதி கிளம்பாமலிருக்க ஏற்பாடு செய்வ

துண்டு. தொழிற்சாலைகளில் புகைபோக்கி வைத்துப் புகையை ஆகாயத்தில் வெகுதூரத்திற்கப்பால் கொண்டு விடவேண்டும். வீதிகள் அகலமாகவும் வீடுகள் நெருக்கமில்லாமலும் இருத்தல் வேண்டும். ஒவ்வொரு வீட்டிலும் வெயிலும் காற்றும் வீசுமாறு அவற்றை அமைக்கவேண்டும். ஆகாரக் குறைவாலும், அசுத்தக் காற்றாலும், தேகப்பயிற்சி இல்லாததாலும் உடம்பு வெளுக்க ஆரம்பிக்கின்றது. இரத்தம் குறைகிறது. கொக்கிப் புழுக்களினாலும் அவ்வாறு ஏற்படுகிறது. இப் புழுக்கள் பாதங்களில் ஒட்டிக்கொண்டதும் ஒருவித அரிப்பு உண்டாகிறது. சொரிந்த உடன் அவைகள் உடலினுட் சென்று குடலில் கொக்கிகள் போல் ஒட்டிக்கொண்டு இரத்தத்தை உறிஞ்சுகின்றன. ஓமத்திலிருந்து இறக்கும் திராவகமே அப் புழுக்களுக்கு ஏற்ற மருந்து. கக்கூஸுகளுக்குப் பாதரக்ஷை போடாமல் போவதும் பிசகு. பாதரக்ஷை புழுக்களை பாதங்களில் ஒட்டிக் கொள்ளாதவாறு செய்கின்றன.

உடம்பும் சுத்தமாக இருந்தால்தான் ஆரோக்கியம் உண்டாகும். சதையில் பலவித ஊற்றுக்கள் உண்டாகி வியர்வையும் எண்ணெயும் அவற்றின் வழியாய் வெளி வருகின்றன. வியர்வையில் தேகத்திற்கு வேண்டாத சில உப்புகளும் அழுக்கும் கலந்திருக்கின்றன. இவைகளோடுகூட மேல் சதையும் உரிந்து கொண்டே இருக்கிறது. தூசிகளும் வெளியிலிருந்து வந்து ஒட்டுகின்றன. ஊற்றுக் கண்கள் அழுக்கினால் அடைபட்டால் மறுபடியும் உடலிலிருந்து எவ்வாறு அசுத்தங்கள் வெளிவரும்? வாரத்தில் ஒரு முறையாவது அரப்புத் தேய்த்து வெந்நீரில் ஸ்நானம் செய்வதால் எண்ணெயும் அழுக்குகளும் நீங்கி ஊற்றுக் கண்கள் சுத்தமாகும். இவ்வாறு தோல் அதற்கு ஏற்பட்டவேலையைச் செய்யாவிட்டால்

சுவாசக்கருவிகளும், மூத்திரக்கருவிகளும் அதிக வேலைசெய்ய நேரிடும். வியர்வை உண்டாகாத குளிர்காலத்தில் ஜலதோஷமும், மார்புச்சளியும் உண்டாவதும், மூத்திரம் அதிகமாய் வெளிச்செல்வதும் தோலில் உள்ள ஊற்றுக்கண்கள் வேலை செய்யாததாலேதான் நேரிடும்.

ஆதலால் நாம் சுகாதாரவிதிகளை அனுஷ்டித்தால் தேகாரோக்கியம் உண்டாகும். சுகாதாரத்திற்கு, உணவு நீர், காற்று, உறைவிடம், உடம்பு முதலியவற்றைச் சுத்தமாக வைத்துக் கொள்ளல் வேண்டும் 'நோயற்றவாழ்வே குறைவற்றசெல்வம்' என்னும் உண்மையை அறிந்துகொண்டு நடந்தால் நமக்கு இன்பவாழ்வு ஏற்படும்.

---

## 9. இலந்தனபுரி (London).

ஆங்கிலேயர்களுக்குரிய நாடாகிய இங்கிலாந்துக்கு இலந்தனபுரி தலைநகரம். நமது தேசத்தை ஆள்கின்ற சக்கரவர்த்தியின் உறைவிடமாகிய இலந்தனபுரியைப்பற்றி நாம் அறிந்து கொள்வது இன்றியமையாததே. இலந்தனபுரி தமஸா நதிக் கரையில் உள்ள ஒரு பட்டினம். அஃது பதின்மூன்று மைல் நீளமும் பத்து மைல் அகலமும் வாய்ந்தது. பிரதானபட்டினம் அதன் நடுவில் ஒரு சதுரமைல் விஸ்தீரணமே பரவியுள்ளது. தொன்றுதொட்டு அப்பட்டினம் தற்பொழுதுள்ள பெருமையில் இல்லை. ஒரு காலத்தில் அது வீடுகளில்லாத வெறும் வெளியாகவும் இருந்தது. நாகரீகமற்ற சிலர் எதிரிகளின் இடையூறுகளுக்குப் பயந்துகொண்டு தமஸாநதிக்கும் வால்புரூக் நதிக்கும் இடையில் உள்ள பத்திரமான இடத்தில் குடியேறினர். அன்னோர் மிருகங்களின் தோலை யுடுத்திக்கொண்டு சிறு குடிசைகளில் உறைந்து வந்த

னர். அவருடைய படகுகளும் பிரம்புகளால் இணைக்கப் பட்டன.

பின்னர் உரோமபுரியினின்று ஜனங்கள் வந்து இலந்தன புரியைக் கைக்கொண்டனர். அவர்கள் வால்புருக் ஆற்றின் கரையில் கோட்டை கட்டிக் குடியேறினர். உரோமர்களின் முயற்சியால் நகரம் பெருகிற்று. போக்குவரவுக்கு இடையூறாக நின்ற நதிக்கு அவர்கள் ஒரு பாலங்கட்டினர். அதுவே இலந்தனபுரிப் பாலம் என்று இப்பொழுது அழைக்கப்படுகிறது. அப் பாலத்தின் அருகில் அவர்கள் ஒரு சுவரையும் எழுப்பினார்கள். சுமார் நானூறு ஆண்டுகள் வரையில் இலந்தனபுரி அவர்கள் வசம் இருந்தது. பின்னர் ஆங்கிலேயர்களும் அவர்களுக்குப் பிறகு டேனியர்களும் இலந்தனைக் கைப்பற்றினர். ஆல்பர்ட் அரசன் டேனியர்களைத் துரத்தி விட்டு நகரைக் காவல் செய்தான். அவன் பாலங்களைப் பழுது பார்த்து நகரில் அநேக மாதாகோயில்களைக் கட்டினான். அவனுக்குப் பிறகு டேனிஷ் அரசனாகிய கான்யூட் அரசாண்டான். அவனுடைய ஆட்சியிலேயே ஜனங்கள் கோட்டைச் சுவரின் புறத்திலும் வீடுகள் கட்டத்தொடங்கினர். ஆதலால் இலந்தனபுரி என்பது கோட்டைக்குள் உள்ள ஒரு சிறிய பகுதியாக மட்டும் இல்லாமல் அதன் புறம்பிலும் பரவத் தொடங்கிற்று.

இலந்தனபுரி சரித்திரத்தில் இரண்டு பெரிய சம்பவங்கள் முக்கியமானவை. அந்நகரத்தில் உண்டான பெருந்தீயும் பிளேக் (Plague) என்ற வியாதியும் எண்ணிறந்த நாசங்களைச் செய்து விட்டன. ஆயிரக்கணக்கான ஜனங்கள் வியாதியால் மாண்டனர். பல வீதிகளும் நெருப்புக்கிரையாயின. பாலத்தினருகில் இப்பொழுதும் பெருந்தீயின் ஞாப

கார்த்தமாக ஒரு கட்டடம் உள்ளது. ஏறக்குறைய நூறு மாதா கோயில்கள் தீயில் அழிந்து விட்டன. பின்னர் அக் கோயில்களைப் புதுப்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

தமஸா நதிக்கரையில் தமஸா வீதி என்ற ஒரு நீண்ட மறுகு உள்ளது. ஒரு காலத்தில் அம்மறுகில் சீமான்களும் சீமாட்டிகளும் அரசர்களும் உறைந்து வந்தனர். இப்பொழுது அது அழகு குறைந்த பல வீடுகள் நிரம்பியதாய்க் குறுகி சுகாதாரக் கேட்டுடன் இருக்கின்றது. அங்கு பல வியாபாரக் கிடங்குகள் உள. நாள் முழுவதும் இறக்குமதியும் ஏற்றுமதியும் அங்குள்ள கிடங்குகளில் நடக்கின்றன. ஆனால் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையிலும் அவ்வீதியில் அமைதி ஏற்படுகிறது. கிடங்குகளில் அன்று வேலை கிடையாது.

நதிக்கரையில் வெஸ்ட்மினிஸ்டர் (West minster) என்ற ஒரு கோயில் உள்ளது. எட்வர்ட் என்ற அரசன் முதன் முதலில் அதைப் புதுப்பித்தான். சிறிது சிறிதாக மற்ற அரசர்கள் அதனை இப்பொழுதுள்ள நிலைக்குக் கொணர்ந்துள்ளார். வெஸ்ட்மினிஸ்டர் ஆங்கிலேய தேசத்துப் பெரியோர்களின் சவக்குழியாக ஆயிற்று. ஒரு மூலையில் கவிஞர்கள் அடக்கஞ் செய்யப்பட்டனர். மற்றொரு இடத்தில் பெரிய உருவச்சிலைகள் இராஜீய நிபுணர்களை ஞாபகப்படுத்துகின்றன. மற்றொருசார் அரசர்களும் அரசிகளும் அடங்கியுள்ளார். அங்கு ஸ்காத்லந்தில் உள்ள ஸ்கோன் என்ற இடத்திலிருந்து கொண்டுவரப்பட்ட சிலை மகுடாபிஷேக நாற்காலியில் அமைக்கப்பட்டிருக்கின்றது. வெஸ்ட்மினிஸ்டரில் பல அரசர்களும் மகுடாபிஷேகம் புரிந்து கொண்டனர். நம்மை ஆள்கின்ற ஜியார்ஜ் சக்கரவர்த்திக்கும் கி. பி. 1911-ம் வருஷத்தில் அங்கு மகுடாபிஷேகம் நடந்தது.

வெஸ்ட்மினிஸ்டரில் நாடாளும் மன்றங்கள் (House of Commons and House of Lords) கட்டப்பட்டிருக்கின்றன. அச்சபையின் ஓரத்தில் பெரிய பென் (Big Ben) என்ற பிரசித்தி பெற்ற மணிக்கூண்டு இருக்கின்றது. பெரிய பென்னிலுள்ள கடிகை உலகத்திலுள்ள கடிகைகள் எல்லாவற்றிலும் சிறப்பு வாய்ந்ததும் பெரியதுமானது. அது இருபத்திரண்டாயிரம் பவுன் விலை பெற்றது. மணிக்கூண்டிற்கு அப்பால் டிராபல்கர் சதுக்கம் (Trafalgar Square) புகழ் பெற்ற வீரனான நெல்ஸனின் உருவச்சிலையை நடுவில் அமையப் பெற்றதாய் இருக்கின்றது. உருவச்சிலை பதினெட்டடி உயரத்துடன் அடித்தளத்தில் நான்கு சிங்கப் பதுமைகளையும் நெல்ஸனுடைய வீரச்செய்கைகள் எழுதப்பட்ட கற்பொறிகளையும் வாய்ந்துள்ளது.

நெல்ஸன் சதுக்கத்தில் பல்வேறு உருவச்சிலைகளும் இருக்கின்றன. பக்கத்தில் அநேக அரசாங்க உத்தியோக சாலைகளும் ஒய்ட் ஹால் (White Hall) என்றகட்டிடமும் இருக்கின்றன. ஒய்ட்ஹாலைப் பார்க்கும்பொழுதெல்லாம் சார்லஸ் அரசன் கொலை செய்யப்பட்டது நமது ஞாபகத்திற்கு வருகின்றது.

தமஸா நதிக்கரையில் டவர் (Tower) எனப்பட்ட ஒரு கோபுரம் புகழ் வாய்ந்தது. டவர் சிறைச்சாலையாகவும், கோட்டையாகவும், அரண்மனையாகவும் இருந்துவந்தது. குற்றவாளிகள் அங்கு சிறை செய்யப்பட்டனர். அரசர்களும் அரசிகளும் பிரபுக்களும் அவ்விடத்தில் மதக்கொள்கைகளுக்காக சிறைப்பட்டிருந்தனர். அவருக்குள் குற்றவாளிகளைக் கொலை செய்துவந்த ஒரு கொலைக்களம் இருக்கின்றது. பலமான மதக்கொள்கைகளை யுடையவர் டவருக்குள் மரணதண்டனை

பெறுவதில் சந்தோஷமுற்றனர். அக்கட்டிடத்திற்குள் இராஜ மகுடமும், விலையுயர்ந்த ஆபரணங்களும் நவரத்தினங்களும் இருக்கின்றன. அவற்றைக் காவலாளர் பத்திரமாகக் காவல் புரிந்து வருகின்றனர். 'கல்லினன்' என்ற ஒரு வயிரக்கல் உலகிலுள்ள கற்களில் பெரியதாயும் விலையுயர்ந்ததாயும் உளது. அது தென்னாப்பிரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டு அரசனுக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்டது. டவரின் கட்டிடங்கள் பல அரசர்களால் வெவ்வேறு காலங்களில் கட்டப்பட்டன.

நாம் பின்னர் இலந்தனபுரிப் பாலத்திற்கு வருவோம். அப்பாலம் முதலில் மரத்தினால் செய்யப்பட்டதுபோல் தோன்றுகிறது. கி. பி. 212-ல் இலந்தனபுரியில் பெருந்தீ உண்டானபொழுது நகரத்தார் பாலத்தின்மேற் குழுமி தீயைப் பார்த்துக்கொண்டிருந்தனர். தீ பாலத்தின் ஒரு புறத்தையும் பிடித்தது. ஜனங்கள் அப்பக்கத்தைவிட்டு அப்பாற் சென்று கொண்டிருந்தனர். அப்பொழுது காற்று வேகமாக அடித்துத் தீப்பொறிகளைப் பாலத்தின் மற்றொருபுறத்தில் கொண்டு சேர்த்தது. பாலத்தின் மறுபுறமும் தீப்பிடித்தது. எண்ணிறந்த ஜனங்கள் இருதலைக்கொள்ளி எறும்புபோல் நெருப்பினிடையில் அகப்பட்டு விட்டனர். பலர் நதியிற் குதித்தனர்; சிலர் தீயில் அகப்பட்டனர். வேறு சிலர் கூட்டத்தில் மிதிபட்டு இறந்தனர். சிலரே உயிர்தப்பிப் பிழைத்தனர். அதன் பின்னர் பாலம் புதுப்பிக்கப்பட்டது.

இலந்தனபுரியில் சாலைகளைப் பழுதுபார்த்தல் விந்தையானது. முதலில் வீதிகள் ஒருவிதப் பொருளால் மெழுகப்படுகிறது. அது காய்ந்ததும் உறுதியாக ஆய்விடும். அதன் மேல் தாரில் (Tar) நனைத்த சிறுமரத்துண்டுகள் அடுக்கப்

படும். ஆதலால் வீதிகள் உறுதியாகவும் பார்வைக்கு நன்று யும் இருக்கின்றன. வீதிகள் முழுவதும் மோடார் வண்டி களும் குதிரைவண்டிகளும் நிறைந்திருக்கும். கடைவீதி களில் பல நிறங்கள் பொருந்திய கண்ணடிக் கதவுகளு டன் கடைகள் பிரகாசிக்கும். வீதிகளி னிருபுறங்களி லும் விளக்குகள் பலவித உருவங்களுடன் விளங்கும். போலீஸாருக்கு (Police man) போக்குவரவுகளைச் சரிப் படுத்த எல்லா உரிமைகளும் உள. போலீஸ்கார னுடைய கையசைப்பு நூற்றுக்கணக்கான வண்டிகளை நிறுத்திவிடும். அவனுடைய உத்தரவின்றி ஒரு துவிசக்கர வண்டிகூட செல் லுதல் கூடாது. வண்டிகள் எல்லாம் வீதியின் இடதுபுறத் திலேதான் செல்லவேண்டும். மே, ஜூன் மாதங்களில் இலங் தனபுரியில் சந்தைகள் கூடும். அப்பொழுது நாலா பக்கங் களிலுமிருந்து ஜனங்கள் குழுமுகின்றனர். போக்குவரவும் அதிகப்படும். வீதிகளின் கீழேயுள்ள குடைவுகளில் மின்சார வண்டிகள் செல்லும். போக்குவரவு தாமதப்படாமலிருக்கும் பொருட்டு ஜனங்கள் மின்சார வண்டிகளில் ஏறிச்செல்வது வழக்கம்.

இலந்தனபுரியில் நிலம் மிகவும் அருமை. ஆதலால், வீடு கள் குறுகியும் உயர்ந்தும் இருக்கின்றன. ஒரு வீட்டில் பல மாடிகள் இருக்கும். வீட்டினுள் சூரியவெளிச்சம் படுவது அரி தாக இருக்கும். தனவான்கள் தங்களுடைய வீடுகளை ஆகா யத்தில் உயர்த்திக்கொண்டே போவார்கள். வீதிகளும் அதிக அகலமாக இரா. பழையகாலத்து வீடுகள் சிலவற்றிற்குச் சிறிய தோட்டங்களும் இருக்கின்றன. ஆனல் அவை தோட்ட மென்று சொல்லக்கூடியவையாய் இல்லை. நாட்டுப்புறத்தார் அத் தோட்டங்களைப் பார்த்து நகைக்கும்படி இருக்கும். எனி

னும் கட்டிடக் கூட்டங்களின் நடுவில் அவை பாலைவனச் சோலைகள்போல் விளங்கும். சிறிது காலத்திற்கு முன் சவங்கள் மாதா கோயில்களின் தோட்டங்களில் புதைக்கப்பட்டன. ஜனநெருக்கம் அதிகமானதும் அத்தோட்டங்களில் எலும்புகளைத் தவிர வேறொன்றும் அகப்படாமல் போயிற்று. ஆதலால் இப்பொழுது நகரத்தின் புறம்பிலேயே சவங்கள் புதைக்கப்படுகின்றன. கோயிற்றோட்டங்கள் குழந்தைகளுக்கு விளையாட்டிடங்களாக மாறிவிட்டன. எலும்புகளெல்லாம் அப்புறப்படுத்தப்பட்டு ஆங்கு புற்கள் வளர்க்கப்படுகின்றன. அவைகளைத் தவிர வேறு சில உய்யான வனங்களும் தோட்டங்களும் நகரில் இருக்கின்றன.

இத்துணைப் பெரிய நகரத்திற்கு உணவுப் பொருள்கள் பல இடங்களிலிருந்து இருப்புப்பாதை மார்க்கமாகவும் படகுகள் மூலமாகவும் கொண்டுவரப்படுகின்றன. இடைவிடாமல் வியாபாரம் நடந்துகொண்டே இருக்கிறது. ஜனங்கள் சுறுசுறுப்பாகத் தங்கள் தங்கள் தொழில்களைச் செய்துகொண்டு இருக்கிறார்கள். நகரவாசத்தின் பல இலக்ஷணங்களும் இலங்தனபுரியில் அமைந்திருக்கின்றன.

---

## 10. நளவெண்பா (சுயம்வரகாண்டம்).

(1) காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளைஅவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலும் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

(2) கோதை மடவார்தங் கோதில்மெயில் திமிர்ந்த
சீதக் களபச் செழுஞ்சேற்ருல்—வீதிவாய்
மானக் கரிவழுக்கும் மாவிந்தம் என்பதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

(3) ஓடாததானை நளனென் றுளன் ஒருவன்
பீடாரும் செல்வப் பெடைவண்டோ—டோ
முருகுடைய மாதர் முகநனைக்கும் தண்தார்
அருகுடையான் வெண்குடையான் ஆங்கு.

(4) வாங்கு வளைக்கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினன்—தேங்குவளைத்
தேனுடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

(5) பேதை மடஅன்னம் தன்னைப் பிழையாமல்
மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்
கடித்துத்தான் முத்துமிழும் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா என்ருன் பெயர்ந்து.

(6) அன்னம்தனைப் பிடித்துஅங் காயிழையார் கொண்டு
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே—அன்னம் [போய்
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

(7) திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே உன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசையில்
தமையந்தி என்ருேதும் தையலாளை மென்ருேள்
அமையந்தி என்ருேர் அணங்கு.

(8) வீமன் திருமகளாம் மெல்லியலை உன்னுடைய
வாம நெடும்பு யத்தேவைகுவிப்பேன்—சேம
நெடுங்குடையாய் என்றுரைத்து நீங்கியதே அன்னம்
ஒடுங்கிடையாள் தன்பால் உயர்ந்து.

(9) மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி அருகணைய—நன்னுதலும்
தன்ஆடல் விட்டுத் தனியிடம்சேர்ந் தாங்கதனை
என்னுடல் சொல்லென்றாள் ஈங்கு.

10. செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான்மங்கையர்
தம்மனத்தை வாங்கும் தடந்தோளான்—மெய்ம்மை[கள்
நளன்என்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளன்என்பான் வேந்தன் உனக்கு.

11. வாவி உறையும் மடஅனமே என்னுடைய
ஆவி உவந்தளித்தாய் ஆதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்நிலைமை சென்றுஉரைத்தி என்று
பார்வேந்தன் பாவை பதைத்து. [உரைத்தாள்

12. கொற்றவன்தன் தேவிக்குக் கோமகள்தன் தோழியர்கள்
உற்றதறியா உளநடுங்கிப்—பொற்றொடிக்கு
வேறுபாடு உண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி.

13. மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடும் நன்னாடன்
வேந்தர்மேல் தூதோட விட்டு.

14. சடைச்செந்நெல் பொன்விளைக்கும் தன்னுடு பின்னுக்
கடல்தானை முன்னுகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொற்றும வீமன் திருமகளாம்
நல்லுயிரும் வாழும் நகர்.

15. மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய
விண்ணுடு நீங்கி விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணுடு நோக்கி மகிழ்ந்து.

16. விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனம்சுளிக்கக்
கண்ணகன் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினுள் பொன்.

---

## 11. நட்பு.

உயிர்வாழ்வன தமது வாழ்க்கையை நடத்துவதற்கு அநேக துணைகள் வேண்டியிருக்கின்றன. நாம் பிறருதவி யின்றி வாழ முடியுமா? நமக்கு வேண்டியன எல்லாவற்றையும் நாமே செய்து கொள்ளல்கூடுமா? உணவுப் பொருள்களை சிலர் பயிரிடுகின்றனர். உடுக்க வேண்டியனவற்றைச் சிலர் நெய்து வியாபாரம் புரிகின்றனர். பலர் பல தொழில்களைச் செய்து பிழைக்கின்றனர். ஆதலால் ஒருவன் பலருடைய உதவியால் வாழ்க்கை நடத்துகின்றுன்..பிறருடைய உதவியின்றி தனித்து வாழ்கின்ற ஒருவனை நாம் விலங்கென்றுவது ஞானியென்று வது கொள்ளல்வேண்டும். இனிது இனிது ஏகாந்தம் இனிது என்ற ஆன்றோர் வாக்கின்படி ஞானிகளே ஏகாந்தத்தை விரும்புவர். அவர்களுக்கே அதனுல் நன்மையுண்டு.

நமக்கு நேரிட்ட இன்ப துன்பங்களைப் பிறரிடத்துச் சொல்லும்பொழுது நாம் ஒருவித ஆறுதலை அடைகின்றோம். நாள் முழுவதும் வேலை செய்துவிட்டு உல்லாசமாகச் சிறிது பொழுதைக் கழிக்க நாம் துணைவர்களை நாடுகின்றோம். நம்மை நல்வழிப்படுத்தித் தீய வழிகளில் செல்லாதவாறு தடுக்கவும் துணைவர்கள் இன்றியமையாதவர். இடுக்கண் நேரிட்ட பொழுது துணை நின்று நமக்கு ஆறுதல் அளிப்பவரும் துணைவரே! ஒருவருக்குக் கல்வியைவிடப் பழக்கமே மேலானதென்பது யாவருக்கும் உடன்பாடானதொன்று. ஆதலால் துணைவர்களின் அவசியம் எவ்வளவு என்று நாம் உய்த்துணரலாம். நமக்கும் அத்துணைவர்களுக்கும் உள்ள தொடர்ச்சியே நட்பெனப்படும்.

நட்பு இருவகைப்படும். நம்மை நல்வழிப்படுத்தி நமது இடுக்கண் களைவாரது தொடர்ச்சி நன்னட்பாகும். நட்டார் போல் தோன்றி ஆபத்துக்காலத்தில் நம்மைவிட்டு ஓடுகின்றவரது புணர்ச்சி தீ நட்பாகும். அதனால் அன்றோ,

> ‘முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
> தகநக நட்பது நட்பு.’

என ஆன்றோர் கூறியுள்ளார். தீயாரொடு புணர்வது மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்குவதை ஒக்கும். அன்னோரிற் சிலர் வஞ்சகமாக நட்பு காட்டித் தக்க இடத்தில் நம்மைக் கெடுப்பதும் உண்டு. வஞ்சக நட்பின் கொடுமையை யாம் என்னென்று கூறுவது? அன்னோரிடம் நட்புப் பூண்டொழுகுவதைவிட பகைமை கொள்வதே சாலச்சிறந்ததாகும்.

> ‘புறநட்டகம் வேர்ப்பார் நச்சுப் பகைமை
> வெளியிட்டு வேறுதல் வேண்டும்’

என்ற சொற்கிணங்க நாம் அவருடைய உள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் பகைமையை வெளிப்படுத்தல்நல்லது. நஞ்சு குளிர்ச்சியாக இருப்பினும் அதனை உண்பாரைக் கொல்லும். வெங்காரம் கொடியதாயினும் பெருநோயைப் போக்கும். அவற்றைப் போல தீயோர்கள் செவிக்கினிய சொன்னாலும் நாம் அவற்றைப் புறக்கணித்துப் பெரியோரது கொடிய சொற்களையும் பொறுமையாகச் செவிகொடுத்துக் கேட்டல்வேண்டும். வஞ்சக நட்பினால் அழியாப்பேறுகள் பெற்ற அரசர்களும் தந்நிலை யழிந்து குன்றினர். ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றாகிய சிந்தாமணியில் அதற்குச் சான்றாக ஒரு வரலாறுளது. சச்சந்தன் என்ற ஏமாங்கதத்தரசன் செங்கோல் பிழையாது அரசாண்டுவரும்பொழுது அவனுக்குத் தன்மனைவிமீது பேராவல் மிகுந்தது. ஆதலால் அவன் தன்னுடைய அமைச்சனை கட்டியங்காரனிடம் இராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டுத் தான் அந்தப்புரத்திலேயே இருந்து இன்ப வாழ்க்கை நடாத்தினன். கட்டியங்காரன் விடநாகத்தையொத்தவன். பாம்புக்குப் பால் வார்த்தவன் நஞ்சையே பெறுவான். வேங்கைப் புலிக்கு விடநோய் தீர்த்த மருத்துவன் அதனுக்கு அங்கு இரையாவன். ஆதலால், அமைச்சன் தன்னை நம்பிய அரசனைக் கெடுக்க வழி தேடினான். கட்டியங்காரன், படைகளைத் தன் வயப்படுத்தி அரசனைக் கொல்ல எண்ணிப் படையுடன் அந்தப்புரத்தை முற்றுகையிட்டான். சச்சந்தன் அதனை யறிந்து கருவுற்ற தனது மனைவியை ஒரு மயிற்பொறி மீதேற்றி வானத்தின் வழியாக அப்புறப்படுத்திவிட்டு உடைவாளேந்தி அந்தப்புர வாயில்சேர்ந்து படையுடன் பொருது உயிரிழந்தான். கட்டியங்காரன் அரசனானான். இதுவே தீயார் நட்பின் பயன்.

'செறுப்பில் பழங்கூரை சேறணையாக
இறைத்தும் நீரேற்றும் கிடப்பர்'

என்றவாறு தீயார் நமக்கு உயிரினும் சிறந்தவர்போல் தம் கருமம் முடியும் வரையில் பழகிப் பின்னர் நம்மைக் கெடுப்பர்.

நன்னட்பின் தன்மை அஃதன்று. அதனையும் பழைய தமிழ்நூலிலுள்ள ஒரு வரலாற்றால் நாம் விளக்குவோம். சேர நாட்டரசன் ஒருவன் செங்கணான் என்ற சோழனிடம் தோல்வியுண்டு சிறைப்பட்டான். அதனை யறிந்த சேரனுடைய தோழரான பொய்கையார் என்ற புலவர் தமது தோழரை விடுவிக்க எண்ணிச் சோழன்மீது பல பாடல்கள் பாடி சோழனிடமிருந்து விடுதலை உத்தரவைப் பெற்றுவந்தார். அதற்குள் சேரராஜன் சிறைக்காவலாளரால் பெருமைகுன்றி உயிரைவிட மானமே பெரிதென்று மதித்துத் தன்னுயிரை நீத்தான். பொய்கையார் நடந்ததை சிறைக்களத்துக்கு வந்து தெரிந்து கொண்டு தோழனுடைய பிரிவாற்றாமையால் மனம் நொந்து பலவாறு புலம்பித் தாமும் உயிர் நீத்தார். இதுவன்றோ நன்னட்பு!

ஆதலால் நாம் ஒருவரோடு கேண்மை கொள்வதற்குமுன் அவருடைய குணங்களை ஆராய்ந்தறிதல் வேண்டும். நட்புக் கோடலைத் தகாதவரிடத்துச் செய்தல் கூடாது.

'யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால் குழைக்கும் நாய்'.

நற்குணங்கள் பொருந்தியவர் நமது தவறுகளையும் பொருட்படுத்தாது நமக்கு நன்றியையே நாடுவர். தீக்குணத்தர் தன்

னலத்தையே பெரிதெனக் கருதி அதற்கு இடையூருக இருப்பன யாவற்றையும் அழித்து நம்மையும் பாழ்படுத்துவர்.

அவ்வாறு நட்பாராய்ந்தவரிடத்து நாம் குற்றங்காணல் கூடாது. மனிதர்களுக்கு முக்குண வயத்தான் பல தவறுகள் நிகழ்வது இயல்பே. குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை. குற்றங்கள் இல்லாதவன் கடவுள் ஒருவனே. ஆதலால் மனிதரிடத்துக் குற்றங்கள் நேருவது கண்டு நாம் நமது நட்பினரைப் புறக்கணித்தல் கூடாது. கை கண்ணைக் குத்திவிட்டால் அதை நாம் களைகின்ருேமா? நாம் குற்றமே செய்யாமல் இருக்கிருேமா?

‘நல்லா ரெனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினும் அடக்கிக் கொளல்—வேண்டும்
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கும் உண்டு’.

ஆதலால் நட்புக் கொண்டவரை நாம் எக்காரணம் பற்றியும் விலகுவது நேரிதன்று. கேளிரது இன்பதுன்பங்களை நாம் நமதென ஏற்றுக்கொள்ளல்வேண்டும். ‘உடுக்கையிழந்தவன் கைபோல வாங்கே இடுக்கண் களைவதாம் நட்பு’ என்றபடி நாம் நட்டாரது துன்பத்தை நீத்தல்வேண்டும். ஆதலால் நமக்கு இன்றியமையாத நட்பினரை ஆராய்ந்து அவரோடு பழகி பல நன்மைகளையும் நாம் பெறுவோம்.

---

## 12. சகுந்தலையின் சாப விமோசனம்.

முன்காலத்தில் துஷ்யந்தன் என்ற ஒரு அரசன் நமது நாட்டில் ஆண்டு வந்தான். அவன் ஒரு நாள் வேட்டையாடச் சென்ற பொழுது காட்டில் கண்வ மகரிஷியின் பர்ண

சாலையை அடைந்தான். கண்வர் சகுந்தலை என்ற ஒரு பெண்ணை வளர்த்து வந்தார். துஷ்யந்தன் அங்கு சென்ற பொழுது கண்வர் வெளிச் சென்றிருந்தார். துஷ்யந்தன் சகுந்தலையைக் கண்டு காமங்கொண்டான். சகுந்தலைக்கும் துஷ்யந்தனை மணம் புரியும் எண்ணம் தோன்றவே இருவருக்கும் காந்தருவ மணம் நிகழ்ந்தது. துஷ்யந்தன் உடனே திரும்பி வருவதாக சகுந்தலையினிடம் விடைபெற்று த்தன்னுடு சென்முன். சகுந்தலை கணவனைப் பிரிந்த துக்கம் மேலிட்டவளாய் அவனிடத்திலேயே தனது முழுநினைவையும் செலுத்தி யிருந்தாள். அப்பொழுது துர்வாச மகரிஷி கண்வரது ஆசிரமத்திற்கு வர மதிமயங்கிக் கிடந்த சகுந்தலை அவர் வந்ததறியாது வாளாவிருந்தனள். துர்வாசர் மிகுந்த கோபங்கொண்டு சகுந்தலையைத் தன் மனைவியென்று அரசன் அறியாது போவான் என்று சபித்து விட்டார். அதனையும் சகுந்தலை அறியவில்லை. அவளுடைய தோழிமார்கள் அதனை யறிந்து துர்வாசரிடமிருந்து சாப விமோசனம் பெற்று வந்தனர். அதை அவர்கள் பின் வருமாறு பூஞ்சோலையில் பேசிக் கொண்டனர்.

அநசூயை :—தோழி! பிரியம்வதே! என் மனம் இன்று தான் மிகுந்த மகிழ்ச்சி பெற்றது. நமது தோழி சகுந்தலை கந்தருவ முறைப்படித் தனக்குத் தகுந்த கணவனைப் பெற்றனள். பற்றற்றுத் தவித்த ஒரு பசுங்கொடி தக்கதோர் கொம்பைத் தனக்கு ஆதரவாகப் பெற்றது போல சகுந்தலையும் ஈடும் எடுப்பும் அற்ற துஷ்யந்த மகாராஜனுக்கு வாழ்க்கைப்பட்டனள். ஆனல் பாற்கடலில் நஞ்சுதோன்றியது போல ஒன்று என் மனத்தைக் கவலையில் ஆழ்த்துகின்றது.

பிரியம்வதை:—என்ன! என்ன! நமது தோழிக்கு ஏதாவது நேர்ந்ததோ!

அநசூயை:—இப்பொழுது துஷ்யந்த மகாராஜன் சகுந் தலையை மணஞ் செய்துவிட்டு விடை பெற்றுத் தன் நகரம் சென்று விட்டார். அவர் சகுந்தலையின் ஞாபகத்தை வைத் துக் கொண்டிருக்கிறார் என்பது ஐயப்படும்படி இருக் கிறது. அரண்மனையில் அந்தப்புரத்தில் தேவலோக இன் பத்தை அனுபவிக்கும் அவர் காட்டிலுள்ள ஒரு எளிய பெண்ணையா நினைக்கப்போகிறார்!

பிரியம்வதை:—என்ன! நீ இவ்வாறு அவநம்பிக்கைப் படுகின்றாய். உத்தம குணமுள்ள ஒரு அரசர்மீது நாம் ஐயுறவு கொள்ளுதல் நேரிதோ? ஒருவேளை கண்வர் ஆசிரமத்திற்கு வந்து நடந்ததை யறிந்தால் என்ன எண்ணுவாரோ?

அந:—கண்வரைப்பற்றின சந்தேகம் எனக்கில்லை. நம் மைப்போலவே அவரும் இந்த சம்பந்தத்தைக் கண்டு மகிழ்ச்சி யுறுவார்.

பிரியம்:—எவ்வாறு?

அந:—கண்வருக்கு நற்குணமுள்ள ஒருவரிடத்தில் கன்னிகையை மணம் புரிவிக்கவேண்டுமென்பது கருத்து. அதன்படியே இப்பொழுது நடந்திருக்கிறது.

பிரியம்:—பூஜைக்கு வேண்டிய புஷ்பங்களை நான் பறித்து விட்டேன். இனி நாம் பர்ணசாலைக்குச் சென்று மகரிஷி யினது பூஜைக்கு வேண்டிய சாமான்களைச் சேகரிப்போம்.

அந:—எனது குடலையும் நிறைந்து விட்டது—இரு இரு—யாரோ அதிதி ஒருவர் கதவைத் தட்டுவது போல் இருக்கிறது. சகுந்தலை உள்ளே இருக்கிறாளோ! அவள் இருந்துதானென்ன? கணவனிடத்தில் ஞாபகத்தைச் செலுத்

திய அவளுக்குச் சப்தம் கேட்குமா? வா! நாம் போய் கதவைத் திறப்போம்.

இருவரும் பர்ணசாலைக்குச் சென்று கதவைத் திறக்கிறார்கள். வாயிலில் ஒரு ரிஷி மிகுந்த கோபத்தோடு பின்வருமாறு சொல்லுகிறார்.

ரிஷி:—(உள்ளேயிருந்த சகுந்தலையை நோக்கி) ஏ! அதிதியை அவமானப் படுத்துகிறவளே! எவனை ஏகாக்கிர சித்தத்துடன் நினைத்துக்கொண்டு மகா தபஸியான என்னை சமீபத்தில் வந்தும் நீ அறியவில்லையோ அவன் பித்துப் பிடித்தவன் தனது பூர்வ சரித்திரத்தை மறந்து விடுவதுபோல உன்னை மறந்து விடக் கடவன்!

அநசூயை:—ஹா! மோசம்! ஹா! மோசம்! நான் நினைத்ததுபோல நடந்து விட்டது. பூஜாருகமான ஒரு மகரிஷி வந்ததை யறியாது சகுந்தலை இருந்து விட்டாள்! (ரிஷியைப் பார்த்து விட்டு) யாரோ மஹரிஷி அல்லர். கோபத்துக் கிருப்பிடமான துர்வாசரே அவர். (உடனே அநசூயை அவரை நமஸ்கரித்துத் தடுக்கிறாள்) சாபத்தைக் கொடுத்து விட்டுத் தடுக்கத் தடுக்க அவர் செல்கிறாரே! நெருப்புக்குத்தான் சுடுந்தன்மை உண்டு. பிரியம்வதா! நீ போய் அவர் காலில் விழுந்து சமாதானப்படுத்தி அழைத்துவா! யான் என் செய்வேன். (பூக்குடலை கீழே விழுகிறது) பிரியம்வதை செல்கிறாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் பிரியம் வதை திரும்புகிறாள்.

பிரியம்வதை:—சுபாவத்திலேயே கோபமுள்ள ஒரு ரிஷியை நான்தான் என்னசெய்ய முடியும்! சற்று இரங்கும்படி நான் செய்தேன்.

அநசூயை :—(முகமலர்ந்து) சபாஷ்! அவரிடத்தில் இதுவே ஜாஸ்தி.

பிரி :—எவ்வளவு சமாதானம் பண்ணியும் அவர் திரும்ப வில்லை! அப்பொழுது ஒன்று தெரிவித்துக்கொண்டேன்.

அந :—என்ன ! என்ன !

பிரி :—தங்களுடைய மகிமையை அறியாமல் என் தோழி செய்த பிழையை மன்னிக் கவேண்டும்!

அந :—பிறகு ; பிறகு ;

பிரி :—அவர் 'இப்பொழுது சாபத்தை மாற்றமுடியாது. துஷ்யந்தன் ஆபரண அடையாளத்தைப் பார்த்ததும் சாபம் நிவர்த்தியாகும்' என்றார்.

அந :—இப்பொழுது எனக்கு சமாதானம் உண்டாகி விட்டது. துஷ்யந்தன் போகும்பொழுது தனது பெயர் பொதிந்த மோதிரத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றிருக்கி றான். அதைக்கொண்டு நாம் காரியத்தைச் சமாளித்துக் கொள்ளலாம்.

பிரியம் :—தோழீ! நாம் உள்ளே போவோம்! இதோ பார்! இடதுகையில் முகத்தைத் தாங்கிக்கொண்டு பர்த்தா வின் ஞாபகமாகவே சித்திரம்போல் இருக்கிறாள் சகுந்தலை! இவ்வளவு கூத்தும் அவளுக்குத் தெரியவில்லை! நல்ல பர்த்தா! நல்ல மறதி !

அந :— இந்த விஷயம் நம்மிருவருக்குள்ளேயே இருக் கட்டும். சுபாவத்திலேயே விசாரமும் ஏக்கமும் பிடித்த நமது தோழிக்கு இதைச் சொன்னால் அவள் நிலை என்னவாகும் ?

பிரியம் :—பன்னீர் மரத்துக்கு வெந்நீர் வார்ப்பார்களா ?

இருவரும் செல்கிறார்கள்.

இவ்வாறு சிலகாலம் சென்றது. சகுந்தலை கருத்தரித்து ஒரு ஆண்மகவைப் பெறுள். உடனே திரும்புவதாகச் சென்ற துஷ்யந்தனே திரும்பவில்லை. கண்வமுனிவர் துஷ்யந்தன் நெடுங்காலமாக வராததைக் கண்டு சகுந்தலையையும் அவள் குழந்தையையும் தமது சிஷ்யர்கள் வசம் துஷ்யந்தனிடம் அனுப்பினுர். துர்வாசர் இட்ட சாபத்தால் துஷ்யந்தனுக்கு சகுந்தலையை முதலில் அறிய முடியவில்லை.



இடம்: இராஜசபை.

வேதாளிகர்கள்:—(சபையில் நுழைந்து) வாழ்க! வாழ்க! செங்கோல்வாழ்க! குடிகளுக்காகத் தன்னலம் பாராது மரம் வெப்பத்தைத் தாங்கித் தன் கீழ் இருப்பார்க்கு நிழலைத் தருவதுபோல் அரசராகிய தாங்கள் குடிகளை ஆதரிக்கிறீர்கள்.

சூரியன் ஒருமுறை பூட்டப்பட்ட பரிகளுடன் எப்பொழுதும் சஞ்சரிக்கிறுன். வாயு இராப்பகலாக வீசுகிறுன். ஆதிசேஷனும் எப்பொழுதும் பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கிறுன். தாங்களும் அப்படியே! (சமீபத்தில் வந்து) அரசே! கண்வ சிஷியர்கள் ஒரு ஸ்திரீயுடன் அரண்மனை வாயிலில் நிற்கின்றனர்.

துஷ்யந்தன் :—கண்வ சிஷியர்களா! கஞ்சுகீ! குரு சோமநாதரிடம் சென்று ஆசிரம வாசிகளைத் தக்க மரியாதையுடன் நமது சபைக்கு அழைத்து வருமாறு சொல்.

கஞ்சுகி :—ஆக்ஞைப்படியே! (செல்கிறுன்)

சிறிதுநேரம் சென்றபின் கௌதமியோடு கூடிய சகுந்தலையை முன்னிட்டுக்கொண்டு ரிஷிகள் பிரவேசிக்கிறுர்கள். இவர்களுக்கு முன் கஞ்சுகியும் புரோஹிதரும் பிரவேசிக்கிறுர்கள்.

கஞ்சுகி:—இப்படி வாருங்கள்.

சாரங்கவன்:—சராத்வத?

நரபதி என்னும் பெயர் நிரம்பவும் தகும். வர்ணங்களில் தரித்திரன்கூட கெட்ட மார்க்கத்தில் பிரவேசிக்கவில்லை. அப்படியிருந்தும் அடிக்கடி ஏகாந்தமாய் இருந்து பழகியதால் ஜனங்கள் நிறைந்த இராஜ்யத்தை அக்கினியால் சூழப்பட்ட வீட்டைப்போல் நான் நினைக்கிறேன்.

சராத்வதன்:—யுக்தமே! பட்டணத்தை அடைந்து இப்படியா நினைக்கிறுய்! எண்ணெயிட்டுக் கொண்டவன் ஸ்நானம் செய்தவனையும் சுசியாயிருப்பவன் அசுசியாயிருப்பவனையும் விழித்துக்கொண்டவன் தூங்குபவனையும் கட்டுப்பட்டவன் விடுபட்டவனையும் எப்படி சுகிஎன்று நினைப்பானே

அப்படியே இந்தப் பட்டண ஜனங்களை நானும் சுகசாலிக ளென்று நினைக்கிறேன்.

சகுந்தலை:—(கெட்ட சகுனத்தைத் தெரிவித்து) ஏன் என் வலதுகண் துடிக்கிறது ?

கௌதமி:—உன் பர்த்தாவான குலதெய்வம் உன் அமங் களங்களை நிவாரணம் செய்யும்.

புரோஹிதர்:—(ராஜாவைச் சுட்டிக்காட்டி) ஹே! தபோ தனர்களே ! வர்ணாச்சிரமங்களை ரக்ஷிக்கிறவரான அரசர் முன் னல் எழுந்து நின்றுகொண்டு தங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். அவர்களைப் பாருங்கள் !

சாரங்கவன் :—ஹே ! பிராமணோத்தம ! இது மிகவும் பெருமை படுத்தத் தகுந்தது. நாங்களும் பக்ஷபாத மின்றி ஆமோதிக்கிறோம். ஏனென்றால்,

மரங்கள் பழங்களின் பாரத்தினால் வணங்கி நிற்கின் றன. மேகங்கள் ஜலத்தின் பாரத்தால் மிகவும் வணங்கி இருக்கின்றன. ஸத்புருஷர்கள் செல்வப்பெருக்கினால் கர்வம் அடைகிறதில்லை. இவை எல்லாம் பரோபகாரிகளுக்கு இயற் கையான குணங்கள்.

பிரதீஹாரீ :—தேவ ! தெளிவடைந்த முகத்தை யுடைய வர்களாக ரிஷிகள் காணப்படுகிறார்கள். ஆகையால் இடைஞ் சல் ஒன்றும் இல்லை என்று நினைக்கிறேன்.

ராஜா :—நானும் அப்படியே நினைக்கிறேன்.

ராஜா :—(சகுந்தலையைப் பார்த்து) இவள் யார் ? தபஸி களின் மத்தியில் கொஞ்சம் மழுங்கின அழகுடன் போர்த்துக் கொண்டு வெளுத்த இலைகளின் நடுவில் இளந்தளிர்போல நிற்கின்றாள்.

பிரதீஹாரி :—எனக்கும் மிகுந்த ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. இவளழகு பார்க்கத்தக்கது.

ராஜா:—இருக்கட்டும்! பிறர் மனைவி! பார்க்கத்தகாதவள்.

சகுந்தலை:—(கையை மார்பில் வைத்து மனதுக்குள்) மனஸே! ஆரிய புத்ரரின் மனோபாவத்தை அறிந்து கொள்ளாமலே நீ படபடக்கிறாய். தைரியமாய் இரு.

புரோஹிதர்:—தேவ! இந்த மகரிஷிகள் விதிப்பிரகாரம் பூஜிக்கப்பட்டிருக்கிறார்கள்! குருவினிடமிருந்து ஏதோ சங்கதி கொண்டு வந்திருக்கிறார்கள். அதைத் தாங்கள் கேட்கவேண்டும்!

ராஜா:—தயாராய் இருக்கிறேன்.

ரிஷிகள்:—கையைத் தூக்கி ராஜா ஜயிக்கட்டும்!

ராஜா:—தங்கள் எல்லாரையும் நமஸ்காரம் செய்கிறேன்

ரிஷிகள்:—உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. தங்கள் இஷ்டங்கள் கைகூடவும்.

ராஜா:—ரிஷிகளின் தவம் விக்கினமின்றி நடக்கிறதா!

ரிஷிகள் :—சாதுக்களை இரக்ஷிக்க நீங்கள் இருக்கும் போது தர்ம கார்யங்களுக்கு விக்கினம் ஏது? சூரியன் பிரகாசிக்கையில் இருட்டுக்கு இடம் உண்டோ!

இராஜன் :—கண்வர் க்ஷேமமாயிருக்கிறாரா? சித்தபுருஷர்கள் குசலத்தோடு கூடியிருக்கிறார்களா?

சாரங்கவன் :—இருக்கின்றனர்! ஆசாரியர் ஆக்ஞாபித்திருக்கிறார்.

அரசன் :—பகவான் என்ன ஆக்ஞாபிக்கிறார்?

சாரங்கவன் :—தாங்கள் காந்தர்வ விவாஹத்தினால் என் பெண்ணை மணந்துகொண்டது என்றாலும் சரி என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது? ஏனென்றால்:—

தாங்கள் பூஜிக்கத் தகுந்தவர்களுள் மேலானவர். சகுந்தலை சத்கர்மாவே உருவெடுத்து வந்தவள். உங்கள் இருவரையும் சேர்த்து வைத்து பிர்மா என்றும் மாருத தன் அபவாதத்தைப் போக்கிக்கொண்டார். ஆகையால் கர்ப்பவதியான இவள் சஹதர்ம சாரிணியாக பெற்றுக்கொள்ளப்படுவாளாக என்று அவர் செய்தி அனுப்பினர்.

கௌதமி:—ஆரிய! நான் ஒன்றுசொல்ல விரும்புகிறேன். எதற்கு சொல்ல வேண்டும்! வேண்டாம்!

அரசன்:—அதென்ன ?

கௌதமி :— அரசே! நீயும் பெரியவர்கள் அனுமதியை எதிர்பார்க்கவில்லை! இவளும் பந்துக்களைக் கேட்கவில்லை! இருவரும் மனமொத்துச் செய்த காரியத்தில் சொல்ல வேண்டியது என்ன பாக்கி ?

சகுந்தலை :—(மனதுக்குள்) ராஜா என்ன சொல்லுகிருர் ?

அரசன் :—என்ன உபயங்யசிக்கிறீர்கள் !

சகுந்தலை —(மனதுக்குள்) பதில் மிகவும் மேலானது!

சாரங்கவன் :—என்னவென்பது இது தான், தாங்கள் உலோக தந்திர நிபுணர் அல்லவா ?

மகா பதிவிரதையாயினும் பெண் பிதா வீட்டில் இருந்தால் சாமான்ய ஜனங்கள் வேறுவிதமாக சந்தேகிப்பார்கள். ஆகையால் புருஷன் விரும்பாவிடினும் பெண் புருஷன் வீட்டிலேயே இருக்கவேண்டும் என்று பெற்றவர்கள் விரும்புகிருர்கள்.

அரசன் :—என்னல் முன் மணக்கப்பட்டவளா இவள் !

சகுந்தலை :—(துக்கத்துடன் மனதுக்குள்) ஹிருதயமே இப்பொழுது நீ பயந்தது நியாயம்.

சாரங்கவன் :—செய்த காரியத்தில் வெறுப்பா ? கடமையைச் செய்வதில் உதாசீனமா? அவமரியாதையா ? இது என்ன !

அரசன் :—என்ன கேள்விகள் !

சாரங்கவன் :—இம்மாதிரியான செயல்கள் சாதாரணமாக ஐசுவரிய மற்றவர்களிடம் பிரத்தியக்ஷமாகக் காணப்படு படுகின்றன.

அரசன் :—வேண்டியது சொல்லிவிட்டீர்கள்.

கௌதமி :—தோழீ ! சற்றுநேரம் வெட்கப்படாமல் இரு. நான் உன் முகமூடியை விலக்குகிறேன். அப்போது உன் பர்த்தா உன்னை அடையாளம் கண்டு கொள்வார். (சொன்னபடி செய்கிறாள்)

அரசர்:—(சகுந்தலையைப் பார்த்து மனதுக்குள்) இவ்வளவு அழகுடைய பெண்ணை முன் கல்யாணம் செய்து கொண்டேனா இல்லையா என்று நிச்சயம் பண்ணாமல் தொடுவதற்கும் அசக்தனாயிருக்கிறேன்.

சபையார்:—தர்மத்தில் ராஜாவின் மனவுறுதியே உறுதி. இப்படிப்பட்ட உருவத்தைப் பார்த்து யாராவது விசாரணை செய்வார்களா ?

சாரங்கவன்:—ஏன் மௌனமாய் இருக்கிறீர்கள்.

அரசர் :—ஹே! தபோதன! யோசித்துப் பார்த்தும் இவளை மணம் செய்து கொண்ட ஞாபகம் இல்லையே. எப்படி கர்ப்பவதியான இவளை பாரியையாக்கிக்கொள்வது ?

சகுந்தலை:—(துக்கத்துடன் மனதுக்குள்) கல்யாணமே ஸந்தேஹமா யிருக்கும்போது மேல் கொண்ட ஆசைக்கு இடம் எங்கிருந்து ?

சாரங்கவன் :—வேண்டாம்!

சொத்தைத் திருடினவனுக்குச் சொத்தைத் தானம் பண்ணுவதுபோல் திருட்டுக்கலியாணம் செய்த உனக்குப் பெண்ணை அனுப்பினவர் அவமதிக்கத் தகுந்தவரே.

சாரத்வதன் :—சாரங்கவ!—நீ சற்று ஓய்! சகுந்தலே! நாங்கள் சொல்ல வேண்டியது சொல்லியாய்விட்டது. அவருக்கு நம்பிக்கை வரும்படி நீயே பதில் சொல்லு!

சகுந்தலை :—(மனதுக்குள்) அப்பேர்ப்பட்ட மறதியுள்ளவரிடம் ஞாபகப்படுத்திதான் என்ன? இப்போது என் ஆத்மா துக்கப்பட வேண்டுமென்பது நிச்சயமாகிவிட்டது. (வெளிப்படையாக) ஆர்ய புத்திர! பரிணயமே ஸந்தேகமாயிருக்கையில் என்ன மரியாதை! பௌரவ! முன் ஆச்ரமத்தில் கபடமறியாத என்னை நம்பும்படி பிரதிக்ஞை செய்து ஏமாற்றி இப்போது தள்ளுவது அழகல்ல!

அரசன் :—(இருசெவிகளையும் மூடிக்கொண்டு) பாபம்! பாபம்! ஏன் என் குலத்தைக் குலைக்கவும் என்னை வீழ்க்கவும், விரும்புகிறாய்.

சகுந்தலை:—இருக்கட்டும். உண்மையாகவே நீ சந்தேகத்தால் இவ்விதம் நடந்துகொண்டால் அடையாளத்தினால் உன் சந்தேகத்தை நான் போக்குகிறேன்.

அரசன்:—நல்ல முறையே!

சகுந்தலை:—(விரலைத் தடவிப்பார்த்து) ஹா! மோசம்! மோதிரத்தைக் காணவில்லையே. (துக்கத்துடன் கௌதமியைப் பார்க்கிறாள்.)

கௌதமி :—சசீதீர்த்தத்தை நமஸ்கரித்தபோது உன் கையிலிருந்து மோதிரம் நழுவிப்போயிருக்கலாம்!

அரசன்:—(சிரித்து) ஸ்திரீகளுக்கு சமயோசித புத்தி உண்டென்பது இப்படித்தான்.

சகுந்தலை:—இந்த விஷயத்தில் விதி தன் வலிமையைக் காட்டிவிட்டது. வேறொன்று சொல்லுகிறேன்.

ராஜா:—அதையும் கேட்கவேண்டியதுதான்.

சகுந்தலை:—ஒருநாள் முல்லைமண்டபத்தில் நீ தாமரை இலைத் தொன்னையில் ஜலத்தை உன் கையில் வைத்துக்கொண்டிருந்தாய். அப்போது என் செல்வ மான்குட்டி அருகில் வந்தது. நீ இரக்கப்பட்டு 'இது முன்னல் குடிக்கட்டும்' என்று சொன்னய். பழக்கமில்லாததால் அது உன் சமீபம் வரவில்லை. பிறகு அதே ஜலத்தை என்கையில் வைத்துக் கொண்டபோது அது என்னிடம் வந்தது. அப்பொழுது 'நீங்களிருவரும் வனவாசிகள்! இனம் இனத்தோடு சேரும்' என்று நீ பரிஹாஸம் செய்ய வில்லையா?

அரசன்:—இவை போன்ற, தம் காரியத்தையே நிறை வேற்றிக்கொள்ளும் தன்மையுள்ள ஸ்தீரீகளின் மதுரமான பொய்ப் பேச்சுகளில் விஷயாசையுள்ளவர்கள் மயங்கிவிடுகிறர்கள்.

கௌதமி:—மகாபாபம்! அப்படி நினைக்காதே! தபோ வனத்தில் வளர்ந்தவள். சூது அறியாதவள்!

அரசன்:—ஹே! தாபஸக்கிழவி!

ஸ்தீரீகளின் வஞ்சன சுபாவம் பசு பக்ஷி மிருகங்களிடத் திலேயே காணப்படுகிறது. அறிவுடன் கூடியவர்களுக்குள் அதைக் கேட்க வேண்டுமா? குயில்கள் தங்கள் குஞ்சுகளைக் காக்கையைக் கொண்டு வளர்த்துக்கொள்ள வில்லையா!

சகுந்தலை:—(கோபங்கொண்டு) அநாரிய! தன்னுடைய ஹிருதயம்போல் எல்லாரையும் நீ பார்க்கிறய். புல்லால்

மறைக்கப்பட்ட பாழுங்கிணற்றைப்போல் தர்மப் போர் வையைப் போர்த்துக்கொண்டு இருக்கும் உனக்கு யார் சமான மாவார்.

அரசன் :—(மனதுக்குள்) இவளுடைய கோபம் மனதை சந்தேகிக்கச் செய்கிறது. மறதியினால் மனம் இரக்கமற்று இருக்கிறது. மிகவும் சிவந்த இவள் கண்கள் மன்மத பாணங் களையே முறிக்கின்றன. (வெளிப்படையாக) ஏ! பதரே! துஷ்யந்த ராஜனுடைய சரித்திரம் யாவருக்கும் தெரிந்ததே. இந்த விஷயம் ஒருவருக்கும் ஞாபகத்திலில்லை.

சகுந்தலை:—தங்கள் மனம்போல் நடத்த என்னை பிரமன் படைத்து விட்டான். வாயில் தேனும், உள்ளத்தில் விஷமும் கொண்ட இவனிடத்தில் தெய்வம் என்னைக் கொண்டு சேர்த்து விட்டது.

(முகத்தை மூடிக்கொண்டு அழுகிறாள்)

சாரங்கவன் :— சுயமாகச் செய்து கொண்ட கார்யத் தின் பலன் இதுதான்! எந்தக் கார்யத்தையும் ஆராய்ந்து பார்த்துக்கொண்டு பெரியோர்களின் அனுமதி பெற்றுச் செய்வதே மேலானது. இரகசியமான கார்யங்களை மிகுந்த ஆலோசனையுடன் செய்தல்வேண்டும். முன்பின் ஆலோசிக்காது செய்த சம்பந்தம் விரோதத்தில்தான் முடியும்.

அரசன்:—ரிஷிகளே! இவள் வார்த்தையையே நம்பிக் கோப வார்த்தைகளால் நீங்கள் என்னைப் புண்படுத்துகிறீர் கள்.

சாரங்கவன் :—தாழ்ந்தவனுடைய பதிலைக் கேட்டுவிட் டீர்கள் அல்லவா? அரசே! என் வார்த்தை நம்பத்தகுந் தல்ல! ஏமாற்றுதலையே பிழைப்பாகக் கற்றுக்கொண்ட உன் னுடைய வார்த்தை நம்பத்தக்கதே!

அரசன்:—சத்திய புருஷர்களே! ஒரு பெண்ணை வஞ்சிப்பதனால் நான் என்ன பயன் அடைவேன்.

சாரங்கவன் :-மேலும் மேலும் பேசுவதேன்? நாங்கள்குருவின் ஆக்ஞைப்படி நடந்துவிட்டோம்; இப்பொழுது திரும்புகிறோம். இவள் உன் மனைவி. வைத்துக்கொண்டால் வைத்துக்கொள்! விட்டால் விடு! மனைவியினிடத்தில் யஜமானுக்குப் பூர்ண சுதந்திரம் இருக்கிறது. கௌதமீ! முன்னால் போ! புறப்படு! (புறப்படுகிறார்கள்)

சகுந்தலை :—நீங்களுமா அழுகிற என்னை விட்டுவிட்டுப் போகிறீர்கள்.

கௌதமி :—சாரங்கவ! புருஷன் வேண்டாமென்றால் குழந்தை என்ன செய்வாள்?

சாரங்கவன் :—(சகுந்தலையை நோக்கி) குற்றத்தையே பாராட்டுகிறவளே! இங்கும் சுதந்திரத்தைப் பாராட்ட ஆரம்பித்துவிட்டாயா? (சகுந்தலை பயந்து நடுங்குகிறாள்.)

சகுந்தலாய்! அரசன் சொல்வது சரியானால் குலத்துக்குக் கேடுவிளைவிக்கும் உன்னால் பிதாவுக்கு என்ன பலன்? நீ குற்றமற்றவள் என்பது உறுதியானால் புருஷன் வீட்டிலேயே அடிமைவேலை செய்துகொண்டிரு.

அரசன் :—மஹரிஷிகளே! ஏன் இங்கு இவளை விட்டுவிட்டு நீங்கள் போகிறீர்கள்! சந்திரன் குமுதங்களையே மலரச் செய்கிறான். சூரியன் தாமரையையே அலர்த்துகிறான். ஐம்புலன்களை அடக்கியவர்கள் பரதாரமோகம் கொள்வார்களா?

சாரங்கவன் :—வேறு சேர்க்கையால் முன் சரித்திரத்தை மறந்த உனக்கு அது எப்படி முடியும்? அதர்மத்துக்கு மிகவும் பயந்தவன் நீயே!

அரசன்:—இந்த விஷயத்தில் எவ்வாறு நடப்பது என்று நீங்களே சொல்லுங்கள்.

சோமநாதர் :—(ஆலோசித்து) இவ்வாறு செய்யலாம். இவள் சிறிதுகாலம் என் வீட்டில் இருக்கலாம். இவளுடைய பிள்ளை தங்களுடைய இராஜ லக்ஷணங்களோடு கூடியிருந் தால் தாங்கள் இவளை அந்தப்புரத்துக்கு அழைத்துச் செல்ல லாம். இல்லையேல் இவளைப் பிதாவினிடமே நாம் அனுப்பி விடுவோம்.

அரசன்:—அப்படியே செய்யுங்கள்! குருவாகிய தங்கள் இஷ்டமே என் இஷ்டமும்!

சோமநாதர்:—குழந்தாய்! என் பின்னே வா!

சகுந்தலை:—பகவதி! பூமிதேவீ! எனக்கு வழிவிடு!

(அழுதுகொண்டு செல்கிறாள். கௌதமியும் ரிஷிகளும் செல்கிறார்கள்.)

(சிறிது நேரத்தில் புரோஹிதர் ஆச்சரியம்! ஆச்சரியம்! என்று திரும்புகிறார்.)

அரசன்:—என்ன ?

சோமநாதர்:—கண்வ சிஷ்யர்கள் திரும்பினார்கள்! சிறிது தூரம் சென்றதும் ஒரு சோதி சகுந்தலையைத் தூக்கித் கொண்டு சென்றது.

அரசன்:—நடந்த விஷயத்தில் என்ன கவலை! நீங்கள் இளைப்பாறுங்கள் !

சோமநாதர்:—அரசே! ஜயமடைக! (வெளியே போகிறார்)

அரசன்:—பிரதீஹாரீ! நான் கலங்கியிருக்கிறேன். சயன சாலைக்கு என்னை அழைத்துச்செல்.

பிரதீஹாரீ:—(அழைத்துக்கொண்டு) இப்படி வாருங் கள்! இப்படி !

அரசன்:—(மனதுக்குள்) சகுந்தலையை மணம்புரிந்து கொண்ட ஞாபகம் சிறிதுகூட இல்லை. ஆனால் மனது படும் துன்பத்தைப் பார்த்தால் நம்பிக்கை தோன்றுகிறது. உண்மையில் அவளை மணம் புரிந்திருக்கிறேனோ?

---

## 13. கண்ணகி.

சோணாட்டிற்கு நெடுங்காலம் தலைநகராக விளங்கியதும் அரசரும் விரும்பும் செல்வத்தையுடைய பரதர் மிகுந்துள்ளதும் நிலவாணிகமும் கலவாணிகமும் ஒருங்கு நிறைந்துள்ளதும் பல தேசத்துப் பொருள்களும் சிறப்புடன் பொலிந்ததும் அறவழியில் பொருள் ஈட்டி அறவோர்க்களித்தல் அந்தணரோம்பல் துறவோர்க்கெதிர்தல், தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் எனஐமவருக்கும் உரிய கடன்களியற்றல் முதலிய நல்லொழுக்கங்கள் பூண்டவர் நிரம்பியதுமாகிய திருநகரில் கரிகாலன் என்ற சோழன் அரசு புரிந்து வந்தான். அப்பொழுது இப்பர், கவிப்பர், பெருங்குடியர் என்னும் மூவகை வணிகருள் பெருங்குடியர் மரபில் உதித்த மாசாத்துவான் என்பவன் தனது மகன் கோவலனுக்கு மாநாய்கன் மகள் கண்ணகியை மணம் புரிவித்தான். கோவலனும் தன் மனைவிபால் அன்புவைத்து,

'மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே! தேனே!
அரும்பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!
மலையிடைப் பிறவா மணியே என்கோ!
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ!

யாழிடைப் பிறவா இசையே என்கோ!
தாழிருங் கூந்தல் தையால்!'

என்று பல்லாற்ருனும் அவளைப் புகழ்ந்து இன்புற்றுச் செருக்குடன் வாழ்ந்து வந்தான். இல்லறமும் செவ்வனே நடைபெற்றது.

அந்நகரில் தேவரும் விரும்பும் தோற்றத்தையுடையவளும் ஆடல் பாடல்களில் தேர்ச்சி பெற்றவளுமாகிய மாதவி என்னும் ஒரு நாடகக் கணிகையினிடத்தில் விருப்புவைத்துக் கோவலன் தன்பாலுள்ள பொருள்களை அவளிடங் கொடுத்து நாடோறும் அவளுடன் இடைவிடாது இன்புற்றிருந்தான். கண்ணகி தன் கணவன் பிரிவிற்கு வருந்தினுலும் அவ்வருத்தத்தை வெளியில் காண்பிக்காமல் இல்லற வொழுக்கத்தில் சிறிதும் வழுவாது நடந்து வந்தாள்.

காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரனுக்கு ஆண்டு தோறும் திருவிழா நடைபெற்றது. நகரத்தார் யாவரும் விழா முடிவிற் கடலாடச் சென்றனர். கோவலனும் மாதவியுடன் கடற்கரை யடைந்து நீராடுவதற்குமுன் வெண் மணலில் உட்கார்ந்து விளையாட்டமர்ந்தான். மாதவியின் வீணையை எடுத்து அவன் பல பாட்டுக்களைப் பாடினன். விதிவசத்தால் கோவலனுடையபாடல்கள் மாதவியினிடத்து ஐயப்பாட்டைத்தோற்றுவித்தன. 'கோவலன் வேறு மகளிர்பால் விருப்புக்கொண்டனன் போலும்' என்று அவள் உறுதிகொண்டாள். உடனே மாதவி கோவலன் கையினின்று வீணையை வாங்கித் தன் அன்பிற் சிறிதும் மாறுபட்டிலளாயினும் கோவலனுக்கு அறிவூட்ட எண்ணிவேறு குறிப்புடையாள் போன்று பல பாடல்களைப் பாடினுள். கோவலன் தான் அன்புடன் நெடுங்காலம்

பழகிவந்த அக்கணிகையிடம் ஐயுற்று 'அவள் வேறுபட்டனள்' என்று வெறுப்புற்று இல்லம் ஏகினன்.

இல்லினுள் கண்ணகி தன் கணவனது மாறான ஒழுக்கத்தில் மனத்தைச் செலுத்தி அல்லலுற்றிருந்தாள். கோவலனுடைய வருத்தத்தைக் கண்டு அவன் கணிகைக்குக் கொடுக்கப் பொருளில்லாமல் வருந்துவதாக எண்ணித் தன் கால்களிலுள்ள இரு சிலம்புகளையும் கழற்றி 'அன்ப! நீங்கள் பொருளில்லாமல் வருந்தல் வேண்டாம்! என் சிலம்புகள் இரண்டையும் எடுத்துக்கொண்டு மாதவியை மகிழ்விக்கலாம்,' என்று கூறிக்கொடுத்தனள். கோவலன் 'நன்மலர்க் கோதாய்! யான் தீவினையின் பயத்தால் பொய்யை மெய்யாகக் காட்டி ஒழுகும் பரத்தையரிடத்து அன்புவைத்து ஒழுகி எனது பொருளையும் தோற்றேன்; நினக்கும் தாங்கவொண்ணாத துன்பத்தை இழைத்துவிட்டேன். பொருள் தோற்ற பின்பே புத்தி வந்தது. நாம் இச் சிலம்புகளைக் கொண்டு மதுரை சென்றுவாணிகம் புரிந்து பொருளீட்டுவோம்' என்றான். கண்ணகியும் கணவனைப் பின் தொடர்வதாகக் கூறினள்.

ஒருநாள் இரவு யாவரும் அறியாமல் கோவலன் கண்ணகியை யழைத்துக்கொண்டு புகாரைவிட்டு நீங்கினன்; வழியில் தவஞ் செய்து கொண்டிருந்த கவுந்தி என்ற ஒரு மாதைக் கண்டு அவள் விருப்பப்படி அவளையும் அழைத்துக்கொண்டு மதுரையை நோக்கிச் சென்றான். வைகையாற்றைப் புணையேறிக் கடந்து முனிவரிருக்கையில் மூவரும் தங்கினர். கோவலன் மதுரை நகர்க்குட்சென்று அந்நகர்வளங்களைக் கண்டான். அப்பொழுது மாதரி என்ற இடைச்சியர் தலைவி அவர்களைக் காண்பதற்கு வர கவுந்தியடிகள் அவளு

டைய நல்லொழுக்கங்களையும் அன்பையும் கண்டு மெச்சிக் கண்ணகியை அவள்பால் அடைக்கலம் செய்யலாம் என்று கூறக் கோவலனும் அதற்கு உடன்பட்டான். மாதரி அவ் விருவரையும் தன் வீட்டிற் கழைத்தேகி புதிய மனையொன் றில் அவர்களை யடைவித்து இல்லறத்திற்கு வேண்டிய பொருள்கள் பலவற்றையும் அங்கு நிரப்புவித்தாள். மாதரி யின் மகள் ஐயை என்பவளும் கண்ணகிக்குப் பிரியாத் துணை யாய்ப் பழகிவந்தாள்.

கோவலன் ஒருநாள் உணவு முடித்த பின்னர் தன் மனைவியை அழைத்து, 'திரண்ட செல்வத்தில் புரண்டு விளங் கிய யாம் இங்கிலையி லிருப்பதற்குச் செய்த தீவினை யாதோ? மலரை மிதிக்கினும் சிவந்து வருந்தும் உன் அடிகள் இந்தப் பாலை வழியில் கல்லும் முள்ளும் உறுத்த நெடுங்காலம் நடந்து வந்ததன் தீவினை என்னவோ! நம்மை நினைத்து நினைத்து இரவும் பகலும் இன்பமற்று வருந்தும் நம் பெற் றோர்களின் நிலைதான் என்னவோ? அந்தோ! அன்னாருடைய முதுமைப் பருவத்தில் பற்றுக்கோடாக இருக்கவேண்டிய நாம் அவர்களுக்கு அறிவிக்காமற்கூட இவ்விடம் வந்து அவர் களை அல்லலுறச் செய்துவிட்டோமே! வீணரோடும் விடரோடும் கூடி நல்லொழுக்கத்தைத் துறந்து பரத்தையர் காதலனாய் ஒழுகிவந்த எனக்கு நற்கதியுண்டோ? யான் செய்த பாவங்களுக்குத் தீத்தண்டம் நேருமென்ற எண்ணம் என்னுள்ளத்தில் தோற்றுகிறது. ஆரணங்கே! என் கவற்சிக் குக் கரையில்லை! யான் உனது சிலம்புகளுள் ஒன்றை எடுத் துச் சென்று மதுரை நகரில் விலைகூறி வருகின்றேன். வருமள வும் தனிமையாய் வருந்துதலை ஒழிவாயாக' என்று கூறி விடை பெற்றேகினான்.

கோவலன் கிளம்பியபொழுது எதிர்ப்பட்ட துர்நிமித்தங் களை அறியவில்லை. அவன் வணிக வீதியை யடைந்ததும் தன் முன்னே பொற் கொல்லர் திரண்டு வருவதைக் கண் ணுற்ருன். சிலம்பை விற்கத்தக்க அமையம் இதுவென்று எண்ணிக் கோவலன் பொற் கொல்லனைக் கூவி? ‘ஐய ! நீவிர் எனது சிலம்பை விலைமதித்து விற்றுத் தருக’ என வணங்கிக் கேட்டுக்கொண்டான். பொற்கொல்லனும் அச் சிலம்பை வாங்கி அது மிகவும் உயர்ந்ததென்றுன்னித் தனக்குள் ‘நன்று நன்று ! பிழைத்தேன் யான் ! என் கவற்சி நீங்கி யது. இச்சிலம்பு அரசியின் காற்சிலம்பையே ஒத்திருக் கின்றது. இரண்டொரு நாட்களுக்கு முன்பே அரண்மனையி னின்று அரசியின் சிலம்பை வஞ்சனையால் யான் கவர்ந்திருக் கிறேன். அரசனுடைய ஒற்றர்கள் மிகுந்த அறிவுடன் கள் வரைத் தேடிக்கொண்டிருக்கின்றனர். நான் அவர்களிட மிருந்து தப்புவது அரிது ! ஆதலால் அரசியின் சிலம்பைத் திருடிய கள்வன் இவனென்று நான் இறைவனிடம் அறிவித்து விட்டால் எனக்குப் பிழைப்பு உண்டு’ என்று உறுதிகொண்டு, ‘வணிக ! இச்சிலம்பு மிகவும் விலை பெற்றது. இதனை அரசர் களே வாங்கத் தகுதி யுடையார். யான் இதனை எடுத்துக் கொண்டு அரண்மனை சென்று விலை பேசி வருகிறேன். அது வரையில் நீ எனது இல்லத்தில் தங்கியிரு’ என்று கூறி அரண் மனைக்கேகினன்.

தீவினை நெருங்கியது. அரசன் பொற்கொல்லனுடைய உரைகளை உடனே நம்பி ஏவலாளரை நோக்கி ‘நமது அரண் மனையினின்று வஞ்சகமாகச் சிலம்பைத் திருடிய கள்வனைப் பிடித்துக் கொலைத்தண்டம் செய்து சிலம்பை எடுத்து வருக’ என்று ஆணையிட்டான். காவலர்கள் பொற்கொல்லனுடன்

கோவலனை யடைந்தனர். அவர்கள் கள்வனுடைய குறிகள் அவன் முகத்தில் காணுது கலங்கினுர்கள். பொற்கொல்லன் அவர்களை யிகழ்ந்து, 'கள்வன் களவுத்தொழிலிலே யன்றி மந்திரத் தொழிலிலும் வல்லன். மந்திர சக்தியால் களவுக்குறிகள் அவனிடம் இல்லை' என்று கூறினுன். ஊழ்வினை வயத்தால் கோவலனும் வெட்டுண்டான். சிலம்பும் அரசனிடம் சேர்ப்பிக்கப்பட்டது.

கண்ணகியிருந்த இடைச்சேரியில் பல உற்பாதங்கள் ஏற்பட்டன. ஆய்ச்சியர்கள் அச்சங்கொண்டு உற்பாத சாந்தியாகத் திருமாலைக் குறித்து குரவைக் கூத்தாடினுர்கள். அப்பொழுது கோவலன் கொலையுண்ட செய்தி கண்ணகிக்கு எட்டியது. கண்ணகி அதனைக்கேட்டு அறிவிழந்து மூர்ச்சையுற்ருள்; பின்னர் தெளிந்து,

'பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடும் சேணிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள் தன்கேள்வனை
எங்கணுஅ என்னு இனைந்தேங்கி மாழ்குவாள்'
'இன்புறு தங்கணவர் இடரெரி அகமூழ்கத்
துன்புறுவன நோற்றுத் துயருறு மகளிரைப்போல்
மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன் யான் அவலம்கொண்டு அழிவலோ'
"நறைமலிவியன்மார்பின் நண்பனை இழந்தேங்கித்
துறைபல திறமூழ்கித் துயருறு மகளிரைப்போல்
மறனெடு திரியும்கோல் மன்னவன் தவறிழைப்ப
அறனெனும் மடவோயான் அவலங்கொண்டழிவலோ!'

என்று கண்ணகி கூறி வானத்திலுள்ள கதிர்ச் செல்வனைப் பார்த்து உலகத்தில் நீ யறியாத பொருளில்லை. ஆதலால் நீ

அறிய என் கணவன் கள்வனோ' என்று முறையிட்டாள். கதிரவன் அசரீரியாய் நின்று 'நின் கணவன் கள்வனில்லை. அவனைக் கள்வன் என்று கூறிய இவ்வூரை விரைவில் எரியுண்ணும்' என்று கூறினன்.

அதைக்கேட்ட கண்ணகி மிகுந்த சினத்துடன் தன்னிடமுள்ள மற்றொரு சிலம்பை எடுத்துக்கொண்டு கண்டார் நடுங்க வீதி வழியே சென்று, 'என் கணவனை மறுபடியும் கண்டு உரையாடுவேன்'என்று சூளுரை செய்து கோவலனை அடைந்தாள். கோவலனுடைய வெட்டுண்ட உடலைக் கட்டியணைத்துப் பலவாறு புலம்ப அவன் உயிர்பெற்றெழுந்து நின்று கண்ணகியின் கண்ணீரை மாற்றி அவ்வுடம்பை ஒழித்துவிட்டுத் துறக்கம் புகுந்தான்.

பாண்டியன் நெடுஞ்செழியன் மனைவி தீக்கனுக்கள் பலவற்றைக்கண்டு அஞ்சித் தன் கணவனோடு அவற்றைச் சொல்லிக்கொண்டிருந்தாள். அப்பொழுது கண்ணகி அரண்மனை வாயிலை அடைந்து வாயில்காப்போனால் அரசனுக்குத் தன் வரவை யறிவித்து அவன் உத்திரவுப்படி உள்ளே சென்று அரசனை நோக்கி 'அரசே ! நீ ஆராயாது செங்கோல் கோடினய் ! என் கணவன் கள்வனில்லை. என் சிலம்பிலுள்ள பரல் மாணிக்கம்' என்று சிலம்பை உடைத்துக் காட்டினள். அரசன் திடுக்கிட்டு, 'இழிந்த பொற்கொல்லன் சொல்லைக் கேட்டு யான் கோல்கோடினேன். கொடுங்கோன்மையை யுடையயானே அரசன் ! ஐயோ ! மிகப் புகழ்பெற்ற எனது குலம் பழிபூண்டு விட்டதே ! என் ஆயுள் இன்றே ஒழிக' என்று கூறிக் கீழே விழுந்து உயிர் நீத்தான்.

கண்ணகி மதுரையை யழிப்பதாகச் சபதம்கூறி அக்கினி தேவனை நோக்கிப் பார்ப்பார் அறவோர் பசு பத்தினிப் பெண்

டிர் மூத்தோர், குழவி என்பவரை நீக்கித் தீத்திறத்தார் பக்கம் சேர்ந்து மதுரையை அழிப்பாய் என்று கூறினள். மதுரை பாழடைந்தது. கண்ணகி பின்னர் மலைநாடடைந்து மலை மேலேறி ஒரு வேங்கைமரத்தின் நிழலினின்று பதினன்காவது தினத்தில் தெய்வ வடிவத்தோடு வந்த கோவலனைக் கண்டு மகிழ்ந்து உயிர் நீத்தாள்.

கண்ணகி உயிர் நீத்ததைக்கண்டவேடர்கள் வியப்படைந்து தமது குறிச்சியில் கண்ணகிக்காக ஒரு குரவைகூத்து செய்வித்தனர். நடந்த செய்தியை அந்நாட்டரசனுக்கு அறிவிக்க விரும்பி அவர்கள் மலைவனம் காண்பதற்கு நால்வகைத் தானையும் புடை சூழத் தம்பி இளங்கோவடிகளுடன் அங்கு வந்திருந்த சேரன் செங்குட்டுவனைக் கண்டு வணங்கி உரைத்தனர். அப்பொழுது மதுரைத் தமிழ்ப் புலவராகிய சாத்தனரும் அரசனிடம் கோவலன் மதுரையில் கொலையுண்டதையும் பிரிவாற்றுது கண்ணகி மதுராபுரிக்கு எரியூட்டியதையும் விரிவாகக் கூறினர். உடனே செங்குட்டுவன் இமயத்திலிருந்து சிலை கொணர்ந்து கண்ணகிக்குக் கோயில் கட்டி அவள் உருவச் சிலையை அம்மலையிற் பிரதிஷ்டை செய்து நித்திய பூசை செய்துகொண்டு ஆங்கு உறைந்து வந்தனன். கோவலன் கொலையுண்டதையும் கண்ணகி உயிர் நீத்ததையும் செங்குட்டுவன் கல்நாட்டிக் கொண்டாடியதையும் கேட்ட கண்ணகியின் தாய்மாரும் தோழியரும் காவிரிப்பூம்பட்டினத்தினின்று நீங்கி அங்கே வந்தனர். கண்ணகியின் சிலையைக்கண்டு பிரிவாற்றுது புலம்பிய அன்னருடைய துன்பத்தைப் பொறுது கண்ணகி தெய்வ வடிவத்தோடு வெளிப்பட்டு செங்குட்டுவனுக்கும் பிறருக்கும் காட்சியளித்தருளினள்.

அப்பொழுது அங்கு வந்திருந்த ஆரிய மன்னரும் மாளவவேந்தரும் இலங்கைக் கயவாகுவும் தத்தம் நாடுகள் சென்று கண்ணகிக்குக் கோயில்கள் கட்டிக்கொண்டாடினர் கள். கோவலன் வெட்டுண்ட காலந் தொடங்கிப் பாண்டிய நாடு மழையின்றி வற்கடஞ் சென்றது. வறுமையும் பிணியும் ஆங்கு மலிந்தன. அதனையறிந்த கொற்கை நகரத்து மன்னன் இளஞ் செழியன் பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்கு ஆயிரம் பொற் கொல்லரைப் பலியிட்டுக்களவேள்வியாற்சாந்தி செய்து விழாவெடுக்க நாடு வளம் பெருக மழை பெய்தது. செங்குட்டு வன் தம்பியாகிய இளங்கோவடிகள் பத்தினிக்கடவுளின் பெரு மையை யறிந்து அவள் வரலாற்றைச் சிலப்பதிகாரம் என்ற ஒரு நூலாகச் செய்தார்.

---

## 14. விசுவரூப வருணனை

வஞ்சனையறிந்து நெஞ்சறிவுற்ற<br>
ஊழியில் காயெரி உடன்றது ; கருங்கடல்<br>
ஓதமும் விசும்பும் உடனுற நிமிர்ந்தது ;<br>
வானும் திசையும் மாயிருள் பரந்தது;<br>
5. நீலமேனி நிமிர்ந் தெழுந் ததுவே;<br>
மறைத்தவண் இருத்திய மல்லரும் அரக்கரும்<br>
ஆர்த்த பொற்பாதம் எய்தலும் அதனெடு<br>
வியன் பாதலத்து வீழ்ந்தனர் பலரே;<br>
அருகணைந் துலகத்<br>
10. தொல்பகை அழியப் பல்வகைப் பொருதிறல்<br>
பரவைநீர் கெடுத்துப் பணிந்தனர் பலரே!<br>
பொடித்தன மயிரே! பொங்கின புகையே!

கடித்தன எயிறே ! மடித்தன வாயே !
நிமிர்ந்தன புருவம் ! மலர்ந்தன நாட்டம் !
15. நெற்றித் தனிக்கண் நெருப்பொடு பிறங்கிற்று !
மற்றைச் செங்கண் மயங்கெரி உமிழ்ந்தன!
பாயிருள் நீக்கும் பல்கதிர்த் திரளென
ஆயிரம் தடக்கை
திசைமுகம் பொதியச் செறிந்தன அவைதாம்
20. திண்சிலை குனிப்பன ! செஞ்சரம் தெரிவன !
வெங்கணைத்தூணி வீக்குவன ! வெஞ்சுடர்
வாளுறை கழிப்பன! கேடகம் அலைப்பன !
சூலம் எற்றுவ ! தோமரம் சுழற்றுவ !
கணிச்சி கொள்வன ! கப்பணம் எடுப்பன !
25. அணிச்சுடர் நெடு வாளொடு வேலடுப்பன !
மழுவொடு தண்டு வகைபெற திமிர்ப்பன !
சத்தி ஒச்சுவ ! சங்கம் தொனிப்பன !
பிண்டி பாலம் பெயர்ப்பன !
ஒண்தொழிற்கணை ஒட்டி அதிர்ப்பன !
30. வடிநுதிக் குந்தம் வலம்இடம் வாங்குவ !
முரண் வலி முன்கை
வளையம் ஒச்சுவ ! வச்சிரம் எடுப்பன !
திரள் இருப்பு உலக்கை திண்ணென ஒச்சுவ !
சுடர்ஒளி ஆழி சுழற்றுவ ! அடல்முழங்கு
35. வலம்புரி ஆர்ப்பன! வன்பிடி முழக்குவ!
பொலன்கழல் விரிப்பன ! பொன்முடி திருத்துவ !
வசையெழப் புகைப்பன ? புகையெழப் பிசைவன !
பூங்கச்சுவரிப்பன பூங்கழல் எடுப்பன !
தூங்கெழில் மணிவிரல் சுட்டிக் காட்டுவ !

40. பூங்கழல் அடிகொடு புரள மிதிப்பன!
பிடிக்கலுற் றடர்ப்பன! புடைக்கலுற் றேச்சுவ!
தோளொடுதோள் கொட்டுவ! தாளொடு தாளடிப்பன
வளைய வாங்கிய ஆயிரம் தடக்கையும்
விண்கெழு படையொடு விசும்படைந் தனவே!
45. காள மாமுகில் இலங்கி மற்றவன்
தோளும் ஆகமும் சூழ்ந்து நின்றனவே!
நீலச்சோதி நிலையுற நிமிர்தலில்
பகலொளி இழந்தது பரிதிமண் டிலமே!
முதல்ஒரு விசும்பின் அந்தரர் மயங்கிப்
50. புகலிடம் இலையெனப் புலம்பி நின்றனரே!
தோள்மிசை வீழ்ந்த சூறை மாருதம்
மீமிசை விசும்பின் மிசைஎடுத் ததுவே!
முடிகலில் தாரகை சுழன்றுதாம் எரிந்தன!
வானக் கங்கைநீர் சுழிதெரிந் ததுவே!
55. தேவர் கோமான் மாமுகில் பொன்னகர்க்
கற்பகச் சோலை பொற்பழிந் தனவே!
பாதாளம் அஞ்சித் துண்ணென்று துளங்க
நாகம் துளக்குற
விசும்பில் தேவரும் திகைப்ப
60. மேனிலை அழிந்து பண்பெயர்ந் ததுவே!
உம்பர் இருக்கும் உலகம் மயங்கப்
பம்பரம் போல அவனி நடுங்க
ஊழியின் இறுதி உடன்றது போலும்
மதனப்புத் தேள் பொடிபட விழித்த
65. நுதல்பெறும் நயனத் தொருபெரும் கடவுளும்
நான்முகத் தொருவனும் வானகத்தரசனும்

அறுமுகத் தொருவனும் உறுசுடர்ப் பரிதியும்
குளிர்மதிச் செல்வனும் இருநிதிக் குபேரனும்
வானுறை தேவரும் காயெரிக் கடவுளும்
70. இயமனும் வருணனும் எண்வகை வசுக்களும்
வீரப் பெண்மயில் மெல்லியல் எழுவரும்
போர்விறல் சிலைக்கைப் பொருகயற் கண்ணியும்
மோடியும் மக்களும் மூவகை முனிவரும்
வானோ ரீட்டமும் மன்னிய கின்னரர்
75. ஏனோர் விஞ்சையர் தம்முட னஞ்சலி
அவுணரும் அரக்கரும் அதிர்ந்த உயர்நிலை
அண்ட கோளகை நிறையவந் தீண்டி
மாதவா! முனியேல்! மாயா! முனியேல்!
மூவகை உலகின் முதல்வா! முனியேல்!
80. இமையவர் மகிழ ஈரடி தம்மல்
மூன்றுலகும் சுருக்கிய முதல்வா! முனியேல்!
மூவா மருந்து வானோர்க் கருளிய
தேவா! முனியேல்! திருமால்! முனியேல்!
என்று எத்திசையும் வணங்கும் எல்லைக்கண்
85. பொருந்தா மன்னனோ டிருந்த வேந்தரில்
கங்கை மகனும் அம்பிகை சிறுவனும்
அங்கநாடனும் அடுபோர் விதுரனும்
துரோணனும் மகனும் தோன்றல் மாமனும்
சிந்து நாடனும் திரிகதத்த ராசனும்
90. குருகுலக் கேண்மை கொண்டோர் கூட்டமும்
உயர்நிலத் தரசர் வந்தோர் ஈட்டமும்
வாட்ட முற்ற மனத்தின ராக
நாட்டம் இல்லா நலமிகு வேந்தன்
ஐயனை அழகனை ஆயிரம் பெயரனைக்

95. கைகுவித் திறைஞ்சிக் காதல்மிக் குரைப்பான்
சேண்பரந் துயர்ந்தநின் திருஉரு வடிவைக்
காண்புறு வண்ணம் கண்ணினை அருளென
ஆதி நாயகன் பேரருள் ஆளக்
கதுமென விழித்தது ! காவலன் கண்ணே !!
100. மாதிரம் நெருக்கி வான்முக டுரிஞ்சிப்
பூதலம் நெருக்கிப் பொலிந்த மேனியைப்
பார்க்கும் பணியும் பரவச மாகி
வேர்க்கும் கண்ணீர் வீழ்த்தும் தானே !
பாடு மன்னரைப் பரிவுடன் தழுவும்
105. வேந்தரும் தானும் வேதியர் குழாமும்
தனித்தனி எழுந்து தடக்கை கூப்பித்
தொழுத கையினர் துளங்கிய நெஞ்சினர்
முழுமெயும் சிலிர்த்து முழுதாண் மயிரினர்
தலைமிசை ஏறிய கையின ராகி
110. வளங்கெழும் ஆசனம் துளங்க எழுந்துநின்
றெந்தாய் போற்றி ! இறைவா போற்றி !
மன்னு போற்றி! மணாளா போற்றி !
அஞ்சன வண்ணத் தரியே போற்றி !
குஞ்சரம் காத்த கோவே போற்றி !
115. கஞ்சனை அடர்த்த கண்ணு போற்றி !
கருங்கடல் துயின்ற காரே போற்றி !
ஆயிரம் தோளுடை அடுபோர் வாணனை
நேமியில் துணித்த நெடியாய் போற்றி !
பேய்முலை உண்ட பிரானே போற்றி !
120. பேருல களந்த மாலே போற்றி !
மருதிடைத் தவழ்ந்த மாயா போற்றி !

மாக்கடல் கடைந்த மகேசா போற்றி !
பெருவரை எடுத்த பிரானே போற்றி !
சங்கொடு சக்கரம் தரித்தாய் போற்றி !

125. தண்டொடு சார்ங்கமும் தனிநாந் தகமும்
பிண்டி பாலமும் பெருவச் சிரமும்
எண்திசை நிறைந்த எம்மான் போற்றி !
அண்டமும் விசும்பும் அகலிடம் எல்லாம்
உண்டுமிழ்ந் தவனே ஒருவா போற்றி !

130. திருமறு மார்பத் திருமால் போற்றி !
தீவினை கெடுக்கும் செல்வா போற்றி !
அருமறை தேடும் அடியாய் போற்றி !
அடியவர் வினைகெட அருள்வாய் போற்றி !
சென்றொரு தூணிடை நின்றாய் போற்றி !

135. சிறுவனை உகந்த செல்வா போற்றி !
அயனொடு தேவர்க் கரியாய் போற்றி !
மலர்மகள் மணந்த மணாளா போற்றி !
நிலமகள் இடந்த நெடியாய் போற்றி !
திருவருள் தருவாய் திருவடி போற்றி !

140. தேவ னவதும் திருமால் ஆவதும்
மூவுல களந்த முதல்வ னவதும்
சிறுகுறி யாளன் அறியாது செய்தன
பொறுகுறி அன்றோ பொறுத்தருள் என்றென்று
எத்திசை அமரரும் இனத்துடன் ஏத்திப்

145. போற்றியே புகழச் சீற்றமு மாறி
அண்டமும் விசும்பும் அகலமும் அனைத்தும்
போக்கற நிமிர்ந்த ஆக்கையைச் சுருக்கினன் !

முரணியப் பெருவலி இரணியன் தனது
கேழ்கிளர் ஆகம் கிழியக்
கூருகிர் வாய்ந்த கொடுந்தொழி லோனே !

---

## 15. வீட்டுமர் பிரிவு.

பாரதப் போர் நடந்தது. முதல் பத்து தினங்களில் நிகரற்ற வீரராகிய வீட்டுமர் எண்ணிறந்தவரைக் கொன்று குவித்தார். தருமாத்மாவான பீஷ்மர் பத்து நாட்கள் முழுமையும் படைகளைக் கலக்கி நாசஞ் செய்ததை எண்ணி உயிர் வாழ்வதில் ஆசையற்று விளங்கினர். உடனே அவர் அருகிலிருந்த யுதிஷ்டிரரை நோக்கி ‘யுதிஷ்டிர! பேரறிவுள்ளவனே! கலைகளில் வல்லவனே! யான் என்னுடைய உடலைச் சுமையாகக் கருதிவிட்டேன். போரில் எதிரிகளைக் கொலை செய்வதே எனது தொழிலாக இருந்தது. நீ எனக்கு உண்மை அன்பனுயிருப்பையேல் அருச்சுனனையும் பாஞ்சாலர்களையும் முன்னிட்டுக்கொண்டு என்னைக் கொல்லும் விஷயத்தில் முயற்சி செய்தல்வேண்டும்’ என்றார்.

திருஷ்டத்யும்னனும் யுதிஷ்டரரும் வீட்டுமர் சொற்களைச் செவியுற்றுத் தங்களுடைய படைவீரருக்கு வீட்டுமரை எதிர்க்குமாறு கட்டளையிட்டனர். பாண்டவர்கள் அருச்சுனனையும் சிகண்டியையும் முன்னிட்டுக்கொண்டு அவரை எதிர்த்தனர். துரோணரும் துச்சாதனனும் வீடுமருக்குத் துணைபுரிந்தனர். இரு படைகளும் எதிர்த்தன. யானைகளின் கர்ச்சனைகளும் சங்கநாதமும் துந்துபியின் ஓசையும் படைகளின் ஆரவாரமும் பயங்கரமாகத் தோன்றின. தேர்ப்

படைகளும் குதிரைப் படைகளும் யானைப்படைகளும் காலாட் படைகளும் மோதி மோதிப் போர்செய்து கீழே விழுந்தன. இருதிறத்துச் சேனைகளுக்கும் பயங்கரமான போர் நிகழ்ந்தது. மகா வீரர்களான கிருபர், சித்திரசேனன், துச்சாதனன், விகர் ணன் முதலியோர் வனப்பு வாய்ந்த தேர்களில் ஏறிப் பாண்ட வரை எதிர்த்தனர். வீட்டுமர் எட்டு திக்குகளிலும் அப்புமாரி பெய்துகொண்டு இருபடைகளுக்கும் இடையில் ஒப்புயர் வற்ற தனி வீரராய் விளங்கினர்.

அப்பொழுது கண்ணன் தனஞ்சயனை நோக்கி 'பீஷ்மர் இரு சைனியங்களுக்கும் மத்தியில் நிற்கிறார். பலத்தினால் இவ ரைக்கொன்று நீ ஜயமடையப் போகிறாய்! வேறொரு வீர னும் பீஷ்மருடைய பாணங்களைப் பொறுத்துக்கொண்டு அவரை அடையமுடியாது. அவரை நெருங்கிப் பொரும் ஆற்றல் படைத்தவன் நீயே!' என்றார். கண்ணனால் தூண் டப்பட்ட அருச்சுனன் பலவீரர்களோடும் வீட்டுமரை எதிர்த் தான். தம்மை எதிர்த்துவந்த சிகண்டியின் பெண்டன்மையை நினைத்து வீட்டுமர் அவன்மீது கணை தொடுக்கவில்லை. பாண்டவ வீரர்கள் பலரும் கங்காபுத்திரனை நோக்கித் தமது படைகளை எய்தார்கள். ஆனால் அவர் யாவற்றையும் தடுத்துக்கொண்டு பாணப் பிரயோகம் செய்தார். அப்பொழுது வீட்டுமர் தமக்குள் 'பாண்டவர்களுக்கு மகா பலசாலியான வாசுதேவர் துணையாயில்லாவிடின் அவர்கள் எல்லாரையும் என் ஒரு வில்லினாலேயே யான் அழித்துவிடுவேன். ஸ்ரீ வாசு தேவர் எல்லா உலகங்களாலும் வெல்லப்படாதவர். பாண்ட வர்களுக்குத் துணையாகக் கண்ணன் இருப்பதும் சிகண்டி ஸ்திரீயா யிருப்பதுமே என்னைப் போர் செய்யாதவாறு தடுக் கின்றன. முன்பு நான் என் பிதாவுக்கு மணம் செய்வித்த

பொழுது சந்தோஷமடைந்த அவர் நான் விரும்பும்போது மரணமும் யுத்தத்தில் ஒருவராலும் கொல்லக்கூடாமையும் ஆகிய இரண்டு வரங்களை யளித்திருக்கிறார். ஆதலால் அப் படிப்பட்ட மரணத்தை யடைவதற்கு இதுவே சமயம்' என்று ஆலோசனை செய்தார். இதனை யறிந்த ரிஷிகளும் வசுக்களும் ஆகாய மார்க்கத்தில் இருந்துகொண்டு பீஷ்மரைப் பார்த்து 'ஐயா! உமது மனத்தில் எண்ணுவது எங்களுக்கும் பிரிய மானது. அதை உடனே செய்யும்! யுத்தத்திலுள்ள உமது புத்தியைத் திருப்பும்!' என்றனர். உடனே நறுமணம் பொருந்திய ஒரு காற்று வீசியது. தேவதுந்துபிகள் பேரொலி செய்தன. பீஷ்மர்மீது பூமாரி பெய்தது. வீட்டுமருடைய உடலில் அம்புகள் படாத இடமில்லை. பொழுது சாய்ந்த தும் வீட்டுமர் அறுத்துத் தள்ளப்பட்ட இந்திரத் துவஜம் போலப் பூமியை எதிரொலி யிடும்படி செய்துகொண்டு கீழே விழுந்தார். சூரியன் தக்ஷிணாயனத்திலிருக்கும்பொழுது அவர் கீழே விழுந்தார். காங்கேயர் அதனை யறிந்து உத்த ராயணம் வரையிலும் பிராணனோடு இருப்பதாக உறுதி கொண்டார்.

வீட்டுமர் கீழே விழுந்ததும் சேனையில் குழப்ப முண் டாயது. துரியோதனாதியர்கள் பெருமூச்சு விட்டுக்கொண்டு அழுதார்கள். துக்கத்தினால் மதிமயங்கி அவர்கள் ஒன்றும் செய்யச் சக்தியற்றவராயினர். எங்கு பார்த்தாலும் ஆ! ஆ!! பீஷ்மர் விழுந்தார்!!! என்ற சப்தமே கோஷித்தது. இரு திறத்துப் படைவீரர்களுக்கும் அச்சம் தோன்றியது. ஆகாயம் இருளால் மூடப்பட்டது. சூரியன் ஒளியை யிழந்தான். வீட்டுமர் அம்புப் படுக்கையிலிருக்க கௌரவர்களும் பாண்ட

வர்களும் நாற்புறங்களிலும் அவரைச் சூழ்ந்து நின்றார்கள். வீட்டுமர் அவரை வரவேற்றுத் தொங்கிக்கொண்டிருந்த தமது தலைக்கு ஒரு அணை வேண்டுமென்று கேட்டார். எல்லோரும் மெத்தென்ற பல அணைகளைக் கொணர்ந்து கொடுக்க அவற்றை யெல்லாம் மறுத்துவிட்டு அருச்சுனன் செய்வித்த அம்புத் தலையணையையே உவந்து ஏற்றுக் கொண்டு பின்வருமாறுகூறினார். மன்னர்களே! அருச்சுனனால் ஏற்படுத்தப்பட்ட



இவ்வணையைப் பாருங்கள்! அம்புப் படுக்கையில் சூரியன் தெற்கினின்று வடக்கே திரும்பும் வரையில் யான் படுத்திருக்கப் போகிறேன். நான் வசிக்கும் இவ்விடத்தில் நீங்கள் அகழ்களைத் தோண்ட வேண்டும். அநேக பாணங்களால் நிறைக்கப்பட்டவனாகிய நான் இந்நிலையிலிருந்து கொண்டே சூரியனை உபாஸிக்கப் போகிறேன். ஒப்பற்ற வீரர்களுக்கு இதைத் தவிர வேறு தகுந்த சயனம் உண்டோ? மன்னர்காள்! வைத்

தியர்கள் எனக்குச் செய்யவேண்டிய சிகித்஭ை யாதொன்றும் இல்லை. க்ஷத்திரிய தர்மத்தில் மிகவும் மேலான கதியை யான் அடைந்துள்ளோன். நான் இவ் வம்புகளுடனேயே நெருப்பில் எரிக்கப்படுவேன். அருச்சுன ! உன்னுடைய பாணங்களாலே சூழப்பட்ட என்னுடைய சரீரம் எரிக்கப்படுகிறது போலிருக்கின்றது. என்னுடைய அங்கங்கள் துன்பம் அடைகின்றன ! என்நா உலர்கிறது ! மகா வில்லாளியான நீயே சாஸ்திர முறைப்படி எனக்குத் தீர்த்தத்தைக் கொடுக்கக்கூடியவன்'என்றார்.

வீரரேறாகிய பார்த்தன் தன் தேர்மீதேறிக் காண்டீவம் என்னும் வில்லில் நாணேற்றி இடி முழக்கம்போல் ஒலியுடன் அம்பெய்தான். நிலங் கீண்டது. நின்மலமான நீரும் பெருகி எழுந்தது. வீட்டுமர் நீர் பருகி அளவிலாத உவகையடைந்தனர். அதனைப் பார்த்துக்கொண்டிருந்த யாவரும் வியப்பெய்தி நின்றனர். உடனே வீட்டுமர் 'தனஞ்சய ! உன்னிடத்தில் இவ்வகையான ஆற்றல் அரிதன்று. முன்பிறப்பில் நீ நரரிஷியாயிருந்தனை யென்றும் இப்பொழுது ஸ்ரீவாசுதேவனைத் துணையாகக் கொண்டு தேவர்களாலும் செய்யவொண்ணாத ஒரு பெருஞ் செயலைச் செய்வாய் என்றும் நாரதர் கூறியுள்ளார். நீ புவியல் உள்ள வில்லாளிகளிற் சிறந்தவன். உலகத்திலுள்ள பிராணிகளில் மனிதர்களும், பக்ஷிகளுள் கருடனும், ஒளியுள்ளவைகளில் பரிதியும், நதிகளுள் கங்கையும் மலைகளில் இமயமும் சிறந்தன போன்று நீ வீரர்களுட் சிறந்து நின்றனை ! என்னாலும், விதுரனாலும், துரோணராலும், பலராமராலும், கண்ணபிரானாலும், சஞ்சயனாலும் சொல்லப்பட்ட புத்திமதிகளைத் துரியோதனன் செவியேற்கவில்லை. நெறி பிறழ்ந்து நெடுங்காலமாக நடந்து வந்த அவன்

விரைவில் அழிவான்' என்று கூறித் துரியோதனனை நோக்கி 'அரசே! சினத்தை விட்டுவிடு! அறிவுள்ளவனை பார்த்தன் குளிர்ந்ததும் நறுமணமுள்ளதுமான நீரை உண்டு பண்ணி யளித்ததை நீ கண்ணாரக் கண்டனை! இத்துணை ஆற்றல் படைத்தவன் இவ்வுலகில் வேறெவருளர்? அவன் ஆக்னே யாஸ்திரம், வாருணாஸ்திரம், சௌம்யாஸ்திரம் வாயவ்யாஸ்திரம், வைஷ்ணவாஸ்திரம், ஐந்திராஸ்திரம் பாசுபதாஸ்திரம் பிர்மாஸ்திரம் முதலியவற்றில் நிகரற்றவன். தேவகி புத்திரரான ஸ்ரீ கிருஷ்ணன் அவனுக்குத் துணையாகஉள்ளார். அவனைப் போரில் ஒருவராலும் வெல்லுதல் இயலாது. குருகுலர் ஏறே! அத்தகைய வீரனெடுவன்மையை நீக்கி நட்பை ஏற்றுக்கொள். அருச்சுனன் பாணங்கள் உன்னுடைய சேனைகளைச் சிதைத்து அழிப்பதன்முன்னர் நீ அவனோடு சந்தி செய்துகொள். வேந்தனே! போரில் இறந்தொழிந்தவர்கள்போக எஞ்சி நிற்கின்ற உனது சகோதரர்களும் வீரர்களும் உயிர் வாழும்படி சமாதானம் செய்துகொள்! பாரதப்போர் என் தலையோடுமுடிவடைக! பாண்டவர்கள் பகையைநீமறந்துவிடு! நான் சொல்லும்சொற்கள் உனக்கு நன்மையையே அளிக்கும்! உன் குலத்திற்கும் பெருமைக்கும் தகுதியுள்ளவையே! மன்னனே! நீ என் பொருட்டுக் கிருபைசெய்! குருகுலத்தை வீணில் அழிக்காதே! பாண்டவர்களுக்குரிய தாயபாகத்தைக் கொடு! தருமராஜன் இந்திரப்பிரஸ்தத்தை அடைவானாக! கௌரவ வேந்திர! நீ மித்திரத்துரோகியென்றும்அரசர்களுக்கடையாயினன் என்றும் பெயர் பெறாதே! குடிகளுக்கு என்னுடைய அழிவினாலாவது சமாதானம் உண்டாகட்டும்! பெற்றவன் பிள்ளையையும் மருகன் மாமனையும் உடன்பிறந்தான் உடன்பிறந்தானையும் மனைவி கணவனையும் பெறுவார்களாக! குடும்

பங்களைச் சின்னுபின்னப்படுத்தி அழித்தவன் என்று பெயர் பெருதே! உயிர் நீத்துச் செல்லும் தருவாயில் உள்ள யான் சொல்லும் சொற்களை அசட்டை செய்து அறிவீனத்தாலாவது தீச்சேர்க்கையினுலாவது புறக்கணிக்காதே! என்று கூறி அம்புகளினுல் ஏற்பட்ட புண்களின் அல்லல் தாங்காது சற்று வாளா இருந்தனர். அரவக் கொடியையுடைய அரசனும் அச்சொற்களைக் கேளாமல் அழிவுக்கு அடிப்படையாயினுன். அரசர்களும் தத்தமிருப்பிடம் சேர்ந்தனர்.

வீட்டுமர் வீழ்ச்சியை அறிந்த கன்னன் விரைந்து வந்து அவரை அண்மி அன்னுருடைய சரணுரவிந்தங்களில் விழுந்து 'குருசிரேஷ்டரே! யான் கன்னன்! குற்றமற்றவனுயினும், பார்க்கும் பொழுதெல்லாம் உங்களால் வெறுக்கப்பட்டவன்' என்று தடுமாறுகின்றகுரலோடு கூறினன். வீட்டுமர் பக்கத்திலுள்ளவரை அப்புறப்படுத்தி கன்னனைப்புல்லி அணைத்து மெள்ளப் பேசலுற்ருர்.

'கன்ன! நீ என்னுடன் பகை கொண்டதில் எனக்கு வருத்தமில்லை! நீ குந்தி புத்திரன்! தேர்ப்பாகன் உனது தந்தையல்லன்! வாகுவலம் பெற்றவனே! நீ சூரியனிடத்திலிருந்து உண்டானவனென்று நாரதரிடமிருந்தும் கிருஷ்ணத்துவைபாயனரிடமிருந்தும் நான் அறிந்துள்ளேன்! அப்பா! எனக்கு உன்மீது வெறுப்பில்லை. நீ அகாரணமாகப் பாண்டவர்களைத் துவேஷித்தாய் என்பதே என்னுடைய எண்ணம். துரியோதனனுல் தூண்டப்பட்டு நீ அறநெறி பிறழ்ந்த பல செயல்களில் தலையிட்டனை யென்பதே என் வருத்தம். இப்புவியில் மாற்ருர்களாய்த் தாங்க முடியாத உன்னுடைய பேராற்றலை யான் அறிந்தவன். உன்னிடத்தில் பொருந்திய அந்தணரோம்பல் அறவோர்க்களித்தல் முதலிய நற்குணங்கள் என்னை

மகிழ்வித்தன. தேவர்களுக்கு நிகரானவனே! மாந்தர்களில் நின்னை யொப்பார் ஒருவருமிலர். அம்புப் பயிற்சியில் நீ பார்த்தனையே நிகர்க்கின்றாய்! உன்மீதிருந்த கோபம் நீ இப்பொழுது இங்கு வந்ததனால்என்னைவிட்டு நீங்கியது. விதியின் வன்மையை யாவரால் தடைசெய்ய முடியும்? வீரர்களான பாண்டவர்கள் உன் உடன் பிறந்தவர்களே! எனக்குப் பிரியத்தைச் செய்ய விரும்புவாயாயின் நீ அவர்களோடு சேர்ந்துவிடு. ஆதித்திய குமாரனே! பகை என்னோடு ஒழிக!' என்றார். கன்னன் 'பரதர்களிற் சிறந்தவரே! நான் குந்திபுத்திரன் என்பதும் சூதபுத்திரன் இல்லையென்பதும் உண்மையே. நான் குந்தியினால் எறியப்பட்டேன்; சூதனால் வளர்க்கப்பட்டேன். துரியோதனனுடைய செல்வங்களை ஆண்டு அனுபவித்த யான் அவனுக்கு மாறாக என்ன செய்ய முடியும்? கண்ணபிரான் பார்த்தனுக்கு உதவி செய்ய எவ்வாறு உறுதிகொண்டுளாரோ அவ்வாறே யான் துரியோதனனுக்கு உதவி செய்ய உறுதிகொண்டிருக்கிறேன். விதியை வெல்ல முடியாதென்ற தங்களுடைய சொல்லே என்னுடைய கொள்கையாம் பூமி அழிவதின் குறிகளைத் தாங்களே கண்டு சபையில் சொல்லியிருக்கிறீர்கள்! பாண்டவர்களையும் ஸ்ரீவாசுதேவனையும் வெல்வது முடியாதென்பதை நானும் அறிந்தவன். ஆயினும் எனது உள்ளம் அவர்களோடு போரையே நாடிச் செல்கிறது. அவ்வித உறுதிகொண்ட எனக்குப் போர்புரியும்படித் தாங்கள் அனுமதி அளித்தல் வேண்டும்'என்று கூறினான்.

பீஷ்மர், கன்னனுடைய மனோதிடத்தையும் எண்ணங்களையும் அறிந்துகொண்டு அவனைத் தர்மயுத்தம் செய்து வீரசுவர்க்கத்தை யடையுமாறு ஆக்ஞாபித்தார். கன்னனும் விடை

பெற்றகன்றான். காங்கேயர் உத்தராயணம் வரையில் உயிர் தாங்கியிருந்து பின்னர் துறக்கமுற்றார்.

---

## 16. ஸ்ரீராம தீர்த்தரின் அறவுரை.

ஸ்ரீராம தீர்த்தர் 'வாழ்க்கையில் இன்பம்' என்பதைப்பற்றிச் செய்த பிரசங்கம்.

கனவான்களே! சீமாட்டிகளே! இன்று நாம் ஆராயப் புகுந்த விஷயம் மிகவும் பெரியது. குடும்ப வாழ்க்கையில் உள்ளவன் பேரின்பம் அடைய முடியுமா என்பது எளிய விஷயமல்ல. உதாரணமுகத்தான் ஒருவனுக்குத் துன்பம் ஏற்படுவதை சொல்லுகிறேன். இந்தியாவில் ஒரு குரூரமான பிரபு இருந்தான். அவன் தன்னுடைய அடிமைகளை அல்லற்படுத்துவான். ஒருமுறை பாகன் நன்றாகச் சமையல் செய்தான். பிரபு அந்த ஆகாரத்தைப் பாகன் சாப்பிடக்கூடாதென்று எண்ணினான். ஆதலால் அவன் 'இன்றிரவு சாப்பாடு வேண்டாம். பொழுது விடிந்ததும் சாப்பிடலாம் இன்றிரவு யார் நல்ல கனவு காண்கின்றனரோ அவர் அந்த உணவைப் புசிக்கலாம்' என்றான். பொழுது விடிந்தது. பிரபு சமையற்காரனை அழைத்து அவன் கண்ட கனா என்னவென்று கேட்டான். சமையற்காரன் பிரபுவைப் பார்த்து 'தாங்கள் சொல்வதற்கு முன்பு நான் சொல்வது தவறு. ஆதலால் தாங்கள் முதலில் சொன்னபிறகு நான் சொல்கிறேன்' என்றான்! பிரபு வேலைக்காரன் உபாயமாக ஒன்றையும் கற்பனை செய்ய முடியாதென்றெண்ணித்தான் ஒரு சக்ரவர்த்தியாக இருக்கத்தன்னிடம் இதரதேசத்தரசர்கள் அடிவணங்கிக் காத்துக்கொண்டிருந்ததாகக்கனாக் கண்டதாகக் கூறினன். உடனே

சமையற்காரன் 'ஐய! நான் தூங்கும்பொழுது ஒரு கனவுகண் டேன். அதில் ஒரு பூதம் என்னைத் துரத்திக்கொண்டு வந்து, நீ இரவிற் சமைத்த உணவைத் தின்றாலொழிய உன்னை நான் விடேன் என்று சொல்ல, நான் எழுந்து சாப்பாட்டைச் சாப் பிட்டுவிட்டுப் படுத்தேன்' என்றான். பிரபுவுக்கு வெட்கமும் ஏமாற்றமும் உண்டாயிற்று. பிரபுவின் துன்பம் அவனாலேயே ஏற்பட்டது. இந்தத் திருஷ்டாந்தத்தினின்று நம்முடைய நோக்கங்களை நீங்கள் நன்றாய் ஆராய்ந்து கொள்ளுங்கள். நாம் எப்பொழுதும் மறு உலகத்தைப்பற்றியும் பேரின்பத்தைப் பற்றியும் கனவுகண்டு கொண்டிருக்கிறோம். வர்த்தமான விஷ யங்கள் நம்மைவிட்டுப் போகின்றன. இன்பவாழ்க்கைக்கு வர்த்தமான விஷயங்களில் குறியிருத்தல் வேண்டும்.

நாம் தெய்வத்தின் முன்னிலையில் இருக்கும் பொழுதெல் லாம் என்ன வேண்டுகிறோம்? கடவுளைப்பார்த்து என்னுடைய கஷ்டங்களை நீக்கியருள் என்று வேண்டாதவர்யார்? கஷ்டத் தினின்று நீங்கவேண்டுபவன் பொருள்களில் நிராசைவைக்க வேண்டும். நிராசை என்ற மொழியைக்கண்டு நாம் அஞ்ச வேண்டாம். நிராசை என்பது ஊண் உறக்கமின்றி உடை களில்லாமல் வெயிலிலும் மழையிலும் நின்று காடுகளின் மத் தியில் தவஞ் செய்வதல்ல. நிராசை யில்லாதவன் பெருமை யடையமாட்டான். உலகத்தில் புகழ்பெற்றவர் யாவரும் நிராசையுள்ளவரே. நிராசையுள்ளவனுக்கே மனவமைதி உண் டாகும். மனோவமைதியின்றி நடத்தும் செயல்கள் முன் னுக்கு வருமா? நிராசையுள்ளவன் தன்னையும் பிறபொருள் களையும் மறந்து ஒரு காரியத்தை நடத்துகிறான்.

நிராசை என்பதே ஞானம். பொருள்களின் அறிவு மட் டும் ஞானமாகாது. பொருள்களின் அறிவு இன்பத்தைக்

கொடுக்காது. அறிவு என்பது புத்தியினால் வருகின்றது. அறிவுள்ளவன் ஞானியாகான். பேரின்பத்தை யடைய விரும்புபவனும் மோக்ஷத்தை அடைய விரும்புபவனும் விஷயங்களை உணர வேண்டும். தான் கடவுளினின்று வேறில்லை என்ற உணர்ச்சியுள்ளவனே ஞானி. உண்மையின் உணர்ச்சியே ஞானம். உண்மையுணர்ச்சி அல்லது ஞானமுள்ளவன் மோக்ஷத்திற்குத் தகுதியுள்ளவன். மோக்ஷம் என்பது இவ்வுலகத்தில் இப்பிறப்பிலேயே அடையக்கூடியதே.

நிராசை ஆற்றலைப் பெருக்குகிறது; நமது துன்பத்தை நீக்குகிறது. நமது அச்சத்தையும் கவலையையும் ஓட்டுகின்றது. ஞானோபதேசத்தைக் கேட்கும்பொழுதெல்லாம் நாம் ஞானிகளாக விளங்குகிறோம். நாம், நமது என்ற விஷய அறிவு சென்று எல்லாம் கடவுள் கடவுளுடையது என்ற ஞானமே தோற்றுகிறது. பிரசங்கத்தைக் கேட்டுவிட்டு வீடு சென்றதும் நாம் நமது என்ற விஷய அறிவு உண்டாகிவிடுகிறது. மனைவி மக்களினுடைய காட்சி கடவுள் என்ற எண்ணத்தையே போக்கிவிடுகிறது. ஆதலால் நாம் செய்வது மோசம் என்று நமக்கே தெரிகிறது. மோசம் செய்பவருக்கு இன்பம் எப்படிவரும்? ஒருவன் மற்றொருவனை தனககுட்பட்டிருக்கவேண்டும் என்று எண்ணுகிறான். கணவன் மனைவியையும் மனைவி கணவனையும், பெற்றோர் பிள்ளைகளையும் பிள்ளைகள் பெற்றோரையும், யஜமானன் வேலைக்காரனையும் வேலைக்காரன் யஜமானனையும் தமக்குக் கட்டுப்பட்டிருப்பதாக எண்ணுகிறார்கள். அவ்வாறு எண்ணுகிறவர்களுக்கு இன்பம் உண்டோ? ஒரு எருதைப் பிடித்துச் செல்பவன் அது தன்னடிமை என்று எண்ணுகிறான். ஆனால் உண்மையில் அவன் அவ்வெருதின் அடிமையாகிறான். அவனைவிட்டு எருது எவ்வாறு ஓட முடி

யாதோ அவ்வாறே அவனும் அவ்வெருதைவிட்டு ஓட முடி யாது. இதனையறிந்தவர் தன்னைப்போல் பிறரையும் சுயேச்சை யுள்ளவராக எண்ணுவார்கள்.

உலகத்திலுள்ள குடும்பங்கள் இன்பமாக இருக்கின் றனவா? ஆயிரத்தில் ஒன்றுகூட அவ்வாறு இல்லை. ஏன்? உலக இச்சைகளைப் பூர்த்தி செய்துகொள்வதே இன்பமென்ற எண்ணத்தினால்தான் துக்கம் நிகழ்கின்றது. ஸ்ரீ கிருஷ்ணன் ஒரு பாம்பினால் விழுங்கப்பட்டபொழுது அவர் அதன் வயிற் றைக் கிழித்துக்கொண்டு வெளியில் வந்தனர் என்று பாகவ தம் கூறுகின்றது. அதுபோலவே பொருள்களில் இச்சை என்பது ஐம்புல நுகர்ச்சி பெற்ற ஒருவன் இருதயத்தை அடைந்ததும் இருதயத்தைப் பிளந்துகொண்டு வெளிவருகி றது. உடனே துக்கம் நேரிடுகிறது. ஆதலால் ஒரு பொரு ளில் ஆசை வைத்தவனுக்கு அதனால் துன்பம் உண்டென்பது நிச்சயம். அதைத் தடுத்தல் ஒருவராலும் இயலாதது. ஒரு வன் தான் ஆசை வைத்த பொருள்களினால் இன்பம் பெறவிரும் பினால் ஏமாற்றமே அடையவேண்டும். நீங்கள் ஒன்றிலும் நம் பிக்கை வைக்காதீர்கள்; உங்களிடத்திலேயே நம்பிக்கை வைத் துக் கொள்ளுங்கள். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களும் கடவுளின் பிம்பங்களே. நீங்கள் அப்பொருள்களில் ஊடு ருவி நிற்கும் கடவுளை எண்ணாமல் பொருள்களின் தோற்றத் தையே நினைக்கிறீர்கள். தோற்றம் மறைந்ததும் துக்கம் ஏற் படுகிறது. ஒரு மனிதனின் படம் அழகாக இருந்தால் நாம் அதனை விரும்புகிறோம்; அதைப் பார்த்துப் பார்த்து மகிழ்கி றோம்; ஆனால் அந்தப் படத்தின் மூலபுருஷன் எதிரே நின்றால் அவனை விரும்பவில்லை. ஒருவனுடைய படத்தை விரும்பிய நாம் அவனையே விரும்பாததன் காரணமென்ன? நாம் படத்

தைப் பார்க்கும்பொழுது அதற்குடையவனை மறந்து விடுகிறோம். அதைப் போலவே பொருள்களைப் பார்க்கும்பொழுது அப்பொருள்களினூடே இருக்கும் கடவுளை மறந்து அல்லற் படுகிறோம்.

நாம் இந்த விஷயத்தை நன்ருய் ஆராய்வோம். நாம் ஒரு பொருளில் அல்லது ஒருவனிடத்தில் ஆசை வைத்திருப்பதாக நினைத்துக் கொள்வோம். நாம் ஆசை வைப்பது எதனிடத்தில்? அவனுடைய உடம்பிலா, தோலிலா அல்லது அவனுடைய அவயவங்களிலா? அவ்வாறிருந்தால் உயிர்நீத்த உடலைக்கண்டு ஏன் ஆசைகொள்ளவில்லை. உடலில் ஆசைவைக்காவிட்டால் எப்பொழுதும் இருக்கிற உயிர் பிரிந்துவிட்டதாக ஏன் வருந்த வேண்டும். நம்முடைய மூட எண்ணங்களும், நம்பிக்கைகளும் நமக்கு நன்ருய்த் தெரிகின்றன. ஆதலால் நம்முடைய இன்ப துன்பங்களுக்கு நாமே காரணமாகிறோம். அகங்காரம் ஒழிந்தால்தான் நிராசை தோன்றும். நிராசையின்றிச் செய்யும் வேலைகள் பயனற்றவை. நிராசையே இன்பத்திற்கு வித்து. நிராசை யுள்ளவனே ஞானி. அவனே தன்னை யறிந்தவன்.

---

# இலக்கணப் பகுதி.



## எழுத்தியல்

1. எழுதப்படுதலினுல் எழுத்தெனப்படுகிறது. எழுத்து இருவகைப்படும். சப்தரூபமாக (ஒலிவடிவாக) உள்ளதொன்றும் வரிவடிவாக உள்ளதொன்றுமாக அது இருவகைப்படும்.

2. பல பரமாணுக்கள் சேர்ந்து ஒரு எழுத்தாகும். எழுத்தின்றிப் பதம் எவ்வாறமையாதோ அவ்வாறே அணுக்களின்றி எழுத்து அமையாது.

3. எழுத்து முதல் என்றும் சார்பென்றும் இருவகைப்படும். ஒரு சொற்கு இன்றியமையாத எழுத்துக்கள் முதலெழுத்துக்கள். அவைகளைச் சார்ந்து வருபவை சார்பெழுத்துக்கள். உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் முதலெழுத்துக்களாம். உயிரும் மெய்யுமின்றிப் பதங்கள் அமையுமா? சார்பெழுத்துக்கள் பத்துவகைப்படும். அவை,

1 'உயிர்மெய் ஆய்தம் உயிரளபு ஒற்றளபு அஃகிய இ, உ, ஐ, ஔ, மஃகான் தனிநிலை பத்தும் சார்பெழுத்தாகும்.'

4. உயிரெழுத்துக்கள்:—அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ எனப் பன்னிரண்டாகும்.

5. உயிரெழுத்துக்களில் குறுகிய சப்தத்தை யுடையவை குறிலென்றும், நீண்ட சப்தத்தை யுடையவை நெடில் என்றும் பெயர் பெறும்.

6. அ, இ, உ, எ, ஒ முதலிய ஐந்தும் குற்றெழுத்துக்கள். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ முதலிய ஏழும் நெட்டெழுத்துக்கள்.

7. ஒரு பொருளைச் சுட்டிக் காண்பிக்கும் எழுத்துக்கள் சுட்டெழுத்துக்கள். அவை அ, இ, உ முதலிய மூன்றும். அவை ஒரு சொல்லின் அகத்தில் வந்து ஒரு பொருளைச் சுட்டிக் காண்பித்தால் அகச்சுட்டென்றும், ஒரு சொல்லின் புறத்தில் வந்து சுட்டிக் காண்பித்தால் புறச்சுட்டென்றும் பெயர் பெறும்.

'அ, இ, உ ம் முதல் தனிவரிற் சுட்டே.'

உ - ம்:— அவன், இவன், உவன் } அகச்சுட்டு; இக்கொற்றன், அப்பலகை, உவ்வீடு } புறச்சுட்டு.

8. கேள்வியைக் குறிக்கும் எழுத்துக்கள் வினா எழுத்துக்கள். அவை எ, யா, ஆ, ஓ, ஏ என ஐந்தாம். வினாவும் சுட்டைப்போல் சொல்லினகத்திலும் புறத்திலும் வந்து அகவினா, புறவினா என இரண்டாகும்.

'எ, யா முதலும் ஆ, ஓ ஈற்றும்
ஏ யிருவழியும் வினாவா கும்மே'

எ, யா என்ற எழுத்துக்கள் சொல்லுக்கு முதலிலும் ஆ, ஓ என்பன ஈற்றிலும் ஏ இரண்டிடங்களிலும் வந்து வினாப்பொருளைக் கொடுக்கும்.

உ - ம்:—

எது, யாது, ஏது } அகவினா; அவனா, இவனோ, இவனே } புறவினா.

9. மெய் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் எனப் பதினெட்டாகும். உயிரேறி நிற்பதற்கு உடம்பு இடமாவது போல உயிரெழுத்து ஏறிவர மெய்யெழுத்துக்கள் இடமாகின்றன.

10. மெய் வல்லினம், மெல்லினம், இடையினம் என மூவகைப்படும்.

க், ச், ட், த், ப், ற் என ஆறும் வல்லினம்.

ங், ஞ், ண், ந், ம், ன் என ஆறும் மெல்லினம்.

ய், ர், ல், வ், ழ், ள் என ஆறும் இடையினம்.

11. முதலெழுத்துக்கள் இரண்டிரண்டு சேர்ந்து ஒரு இனமாகும். இடையினம் ஆறும் ஒரு இனம்.

'ஐ ஔ இ உச்செறிய முதலெழுத்து
இவ்விரண்டு ஓரினமாய் வரல் முறையே.'

உ-ம்:—அ ஆ, இ ஈ, உ ஊ, எ ஏ, இ ஐ, ஒ ஓ, உ ஔ, க்ங், ச்ஞ், ட்ண், த்ந், ப்ம், ற்ன், ய் ர் ல் வ் ழ் ள் } இனவெழுத்துக்கள்.

இனவெழுத்துக்கள் பிறக்குமிடத்தில் ஒருநிலை யுடையன வாகும்.

12. மெய்யோடு உயிர்சேர்ந்து உயிர்மெய் தோன்றும். பதினெட்டு மெய்யுடன் பன்னிரண்டு உயிர்சேர உயிர்மெய் யெழுத்துக்கள் 216-ஆகும்.

13. கேடயம் என்ற ஆய்தம் போன்றிருப்பது ஆய்த வெழுத்தாகும். அது உயிரோடும் சேராமல் மெய்யோடும் சேராமல் தனித்து நிற்றலால் தனிநிலை எனப்படும். ஆய்தம் மாத்திரை மிக்கும், இயல்பாயும், குறுகியும் வரும்.

14. செய்யுளில் ஓசை குறைந்தவிடத்து அவ்வோசையை நிறைத்தற்பொருட்டு ஒரு பதத்திலுள்ள நெட்டெழுத்து மாத்திரை மிக்கெழும். அவ்வாறு வந்ததற்கு அறிகுறி அந்நெட்டெழுத்தின் இனமாகிய குற்றெழுத்து அடுத்து வருவதேயாகும். அது உயிரளபெடையாகும்.

உ - ம்:— ஓ ஓதல் வேண்டும்.

15. செய்யுளில் ஓசை குன்றிய விடத்து நெட்டெழுத்துக்களைப் போல மெய்யெழுத்துக்களும் அளபெடுக்கும். மெய் அளபெடுப்பதற்கு அறிகுறி அம் மெய்யெழுத்து மீண்டும் வருவதாகும்.

உ - ம் :—இலங்ங்கு வெண் பிறைசூடி.

16. இ, உ, ஐ, ஔ, ம் என்ற எழுத்துக்கள் சிற்சில இடங்களில் மாத்திரை குறைந்து வரும்.

17. மாந்தருக்கு இயல்பாக எழுகின்ற கண்ணிமைப் பொழுதும் கைந்நொடிப் பொழுதும் ஒரு மாத்திரைப் பொழுதாகும்.

'மூன்று உயிரளபு இரண்டாம் நெடில் ஒன்றே
குறிலோடு ஐ, ஔக் குறுக்கம் ஒற்றளபு,
அரை ஒற்று, இ, உக் குறுக்கம் ஆய்தம்,
கால் குறள் மஃகான் ஆய்தம் மாத்திரை.'

உயிரளபெடைக்கு மூன்றும் நெடிலுக்கு இரண்டும் குறிலுக்கும் ஐ, ஔக்குறுக்கத்திற்கும் ஒற்றளபிற்கும் ஒன்றும் மெய்க்கும் இ, உக்குறுக்கத்திற்கும் ஆய்தத்திற்கும் அரையும் மகரக் குறுக்கத்திற்கும் ஆய்தக்குறுக்கத்திற்கும் காலுமாக மாத்திரை வரும்.

'ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின்.'

உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் இராகத்திலும் அழைத்தலிலும் பண்டமாற்று முதலியவற்றிலும் முன் சொன்ன அளவைக்கடந்து ஒலிப்பதும் உண்டு.

18. தமிழ்ச்சொற்களின் முதலில் எல்லா எழுத்துக்களும் வாரா. உயிரெழுத்துக்களும் க, ச, த, ந, ப, ம, வ, ய,

ஞ, ந, என்ற வருக்கத்து உயிர்மெய்யெழுத்துக்களுமே முதலெழுத்துக்களாக வரும்.

'பன்னீ ருயிரும் ச ச த ந ப ம வ ய
ஞ ங ஈ ரைந்துயிர் மெய்யும் மொழிமுதல்.

19. அவ்வாறே சொல்லின் ஈற்றிலும் உயிரெழுத்துக்களும் ஞ் ண் ந் ம் ன் ய் ர் ல் வ் ழ் ள் முதலிய மெய்யெழுத்துக்களும் ஈற்றெழுத்துக்களாக வரும்.

' ஆவி ஞண நமன யரலவழள மெய்
சாயும் உகரம் நாலாறும் ஈறே.

20. ஒரு சொல்லில் ஒரு எழுத்து உள்ள விடத்தில் அவ்வெழுத்துக்குப் பதிலாக வேறொரு எழுத்து வந்தாலும், அர்த்தம் மாறாமல் ஒத்திருப்பது போலியாகும். போலி எழுத்துக்கள் சொல்லின் முதலிலும் இடையிலும் கடையிலும் வருவதுண்டு.

' அ ஐ முதலிடை ஒக்கும் ச ஞ ய முன்'

உ - ம்:—முதற்போலி பசல் மயல்
பைசல் மையல்

இடைப்போலி :—அரயர் அமச்சு
அரையர் அமைச்சு.

'மகர விறுதி அஃறிணைப் பெயரின்
னகரமோடு உறழா தடப்பன உளவே.

உ - ம்:—கடைப்போலி. முகம் மரம் அறம்
முகன் மரன் அறன்.

## பதவியல்

21. எழுத்துக்கள் தனித்தாயினும் இரண்டு முதலாகத் தொடர்ந்தாயினும் பொருள்தருமாயின் பதமாகும்.

பொருள் தராதவை பதமாகா. அப்பதம் பகுபதம் என்றும் பகாப்பதம் என்றும் இருவகைப்படும்.

'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம் அது பகாப்பதம் பகுபதமென
இருபா லாகி இயலும் என்ப.'

22. பகாப்பதம் என்பது பிரிக்கப்படுதலினால் பிரயோசனமில்லாமல் இடுகுறியாகி ஆதிகாலந் தொட்டு ஒரே தன்மையவாகி வருகிற பெயர், வினை, இடை, உரியாகிய நான்கு சொற்களும் ஆம்.

**உ - ம்:**—கலம், காற்று—பெயர்ப் பகாப்பதம்
நட, வா—வினைப் பகாப்பதம்
மற்று, போல்—இடைப் பகாப்பதம்
சால, தவ—உரிப் பகாப்பதம்
'பகுப்பாற் பயனற் றிடுகுறியாகி
முன்னே ஒன்றாய் முடிந்தி யல்கின்ற
பெயர்வினை இடைஉரி நான்கும் பகாப்பதம்.'

23. பொருளாதி யாறின் அடியாகப் பிறக்கும் பெயர்ச் சொற்களும் வினைச்சொற்களும் பகுபதங்களாம். இடைச் சொல்லிலும் உரிச்சொல்லிலும் பகுபதம் இல்லை.

உ -ம்:—பொன்னன்—பொருள்
நாடன்—இடப்
ஆதிரையான்—காலப்
கண்ணன்—சினைப்
கரியன்—குணப்
கொத்தன்—தொழிற்
} பெயர்ப் பகுபதம்

நடந்தான், அல்லன்—வினைப்பகுபதம்.

24. பகுபதம் பகுதி விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம் என்ற ஆறு உறுப்புக்களாகப் பிரிபடும்.

பகுபதத்திற்குப் பகுதி விகுதி இன்றியமையாதவைகள். மற்றைய உறுப்புக்கள் பெற்றும் பெறாமலும் அவை வரும்; பதத்தின் முன் நிற்கும் உறுப்பு பகுதி; பகுதியின் பொருளை கடையில் நின்று வேறுபடுத்துவது விகுதி ; பகுதி விகுதிகளின் இடையில் நிற்பது இடைநிலை; பகுதி விகுதிகளைச் சார்ந்து இயைந்து வருவது சாரியை ; புணர்ச்சி விதியால் உண்டாகிறது சந்தி ; இலக்கணத்துக்கு ஏற்ப விகாரமடைந்து வருவது விகாரம்.

உ - ம்:—

| | | |
|---|---|---|
| கூனி : | கூன் + இ. | பகுதியும் விகுதியும் |
| வலைஞன் : | வலை + ஞ் + அன். | பகுதி, இடைநிலை, விகுதி. |
| உண்டனன் : | உண் + ட் + அன் + அன். | பகுதி, இடைநிலை, சாரியை, விகுதி. |
| படித்தனன் : | படி + த் + த் + அன் + அன். | பகுதி, சந்தி, இடைநிலை, சாரியை, விகுதி. |
| நடந்தனன் : | நட + த் + த் + அன் + அன். | பகுதி, சந்தி, இடைநிலை, சாரியை, விகுதி. சந்தியால் வந்த தகரம் நகரமாக விகாரமாயிற்று. இங்கு ஆறுறுப்பும் வந்தன. |

25. பகுதிகளில் பண்புப்பகுதிகளும் வினைப்பகுதிகளும் முக்கியமானவை. பண்பை விளக்குபவை பண்புப் பகுதிகளாம்.

'செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை உண்மை நுண்மை இவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.'

சொல்லுக்கு இறுதியில் வரும் எழுத்துக்களைக் கடைசியில் உடைய தெரிநிலை வினைப்பகாப்பதங்களும் ஏவல்களும் வினைப்பகுதிகளாம்.

'நட வா மடிசீ விடு கூவேவை
நொப் போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின்
தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகுளன்று
எய் திய இருபான் மூன்றாம் ஈற்றவும்
செய் யென் ஏவல் வினைப் பகாப்பதமே.'

26. மேலே சொல்லப்பட்ட வினைப்பகுதிகள் எல்லாம் தன்வினையைக் காட்டும். தன்வினைப்பகுதிகள் பிறவினைப் பகுதிகளாக மாறுவதுமுண்டு.

(1) தன்வினைப்பகுதிகளுடன் வி, பி, சு, கு முதலிய விகுதிகள் சேர்ந்தாவது,

(2) அவைகளில் உள்ள மெல்லொற்று வல்லொற்றாக மாறியாவது,

(3) அவைகளில் உள்ள ஒற்று இரட்டித்தாவது பிறவினைகளாம்.

**உ - ம்:**—(1) வா—வருவி
நட—நடப்பி
போ—போக்கு
பாய்—பாய்ச்சு
} விகுதி பெற்றுப் பிறவினையாயின.

(2) திருந்து—திருத்து
எழும்பு—எழுப்பு
} மெலி வலியாகிப் பிறவினையாயின

(3) உருகு—உருக்கு<br>ஆடு—ஆட்டு<br>ஓடு—ஓட்டு } ஒற்றிரட்டித்துப் பிறவினையாயின

27. விகுதிகள் பலவகைப்படும். விகுதிகளுக்குத் தகுந் தாற்போல் சொல்லின் இலக்கணமும் மாறுபடும்.

அவை வருமாறு:—

அன், ஆன்—சென்றனன், சென்றான்—ஆண்பால்

அள், ஆள்—சென்றனள், சென்றாள்—பெண்பால்

அர், ஆர் } சென்றனர், சென்றார்<br>ப, மார் } செல்ப, சென்மார் } பலர்பால்.

து, று—நடந்தது, போயிற்று—ஒன்றன்பால்

அ, ஆ—நடந்தன, நடவா—பலவின்பால்

கு, டு, து, று<br>என், ஏன்<br>அல், அன் } நடந்தனன், நடந் தேன், நடப்பல் முதலியன. } தன்மை ஒருமை

அம், ஆம்<br>எம், ஏம்<br>ஓம், டும், கும்<br>தும், றும் } நடப்பம், நடப்பாம் முதலியன } தன்மைப் பன்மை

ஐ, ஆய், இ—நடந்தனை, நடந்தாய் சேறி. } முன்னிலை ஒருமை

மின், இர், ஈர்—நடமின், நடந்தனிர் நடந்தீர். } முன்னிலைப் பன்மை

ஈயர், க, ய—நிலீயர், செல்க, வாழிய—வியங்கோள்

இவை போல்வன பிறவும் வரும்.

28. இடைநிலை பெயர் இடைநிலை என்றும் வினை இடை நிலை என்றும் இருவகைப்படும்.

உ - ம்:—அறிஞன் ஞகர இடைநிலை<br>பொருநன் நகர இடைநிலை<br>புலைச்சி சகர இடைநிலை } பெயர் இடை நிலை.

வினை இடைநிலைகள் காலங்காட்டும்.

'தடற வொற் றின்னே ஐம்பால் மூவிடத்து
இறந்த காலம் தருந்தொழில் இடை நிலை.'

இறந்தகால இடைநிலைகள் த், ட், ற், இன் முதலியன.

**உ - ம்** :—படித்தான், உண்டான், சென்றான், உறங்கினான்.

'ஆ நின்று கின்று கிறு மூவிடத்தின்
ஐம்பால் நிகழ் பொழுது அறைவினை இடை நிலை.'

நிகழ்கால இடைநிலைகள் ஆநின்று, கின்று கிறு முதலியனவாம்.

**உ - ம்** :—நடவா நின்றான், நடக்கின்றான், நடக்கிறான்.

'பவ்வ மூவிடத்தைம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலை யாம் இவை சிலவில.'

எதிர்கால இடை நிலைகள் ப், வ் முதலியனவாம்.

**உ - ம்** :—நடப்பான், வருவான்.

## சொல்லதிகாரம்.

29. இருதிணை ஐம்பாற் பொருளையும் தன்பொருளையும் மூன்று இடங்களிலும் உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் வெளிப்படையாகவேனும் குறிப்பாகவேனும் விரித்துக்கூறுவது சொல்லாம்.

30. திணை இருவகைப்படும்.

'மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயி ருள்ளவும் இல்லவும் அஃறிணை.'

31. உயர்திணைக்கு மூன்று பால்கள் உள.

'ஆண் பெண் பலரென முப்பாற் றுயர்திணை.'

32. அஃறிணைக்கு இரண்டு பால்கள் உள.
'ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.'

33. இடம் மூன்று வகைப்படும்.
'தன்மை முன்னிலை படர்க்கை மூவிடனே.'

34. சொல் இயற்சொல்லும் திரிசொல்லும் என்று இருதன்மையவாம். அது பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் உரிச்சொல்லும் என நால்வகைப்படும். திசைச்சொல்லும் வடசொல்லும் வரும்.

35. இயல்பாய் யாவர்க்கும் பொருள் விளங்கும் சொல் இயற்சொல்லாம்.

'செந்தமிழாகித் திரியாது யார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.'

உ - ம்:—மரம், பொன்—பெயர் இயற்சொல்
நடந்தான், வந்தான்—வினை இயற்சொல்
அவனை அவனால் ஐ, ஆல்—இடையியற்சொல்
அழகு, அன்பு—உரியியற்சொல்.

36. 'ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்,
பலபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்'

ஒரு பொருளைத் தெரிவிக்கிற பல சொற்களாயும் பல பொருள்களைத் தெரிவிக்கிற ஒரு சொல்லாயும் கற்றோர்களால் மாத்திரம் அறியக் கூடியவையாயிருப்பவை திரிசொற்களாம்.

உ - ம்:—

கிள்ளை, தத்தை—கிளி என்ற ஒரு பொருளைக் குறித்த பல பெயர்த் திரிசொல்.

படர்ந்தான், சென்றான்—ஏகினன் என்ற ஒரு பொருள் குறித்த பலவினைத் திரிசொல்.

காசு—குற்றம் பொன் முதலிய பல பொருள் குறித்த திரிசொல்.

37. தமிழ் நாட்டை யொழித்துப் பிற திசைகளில் வழங்குகிற தேச பாஷைகளினின்று தமிழில் வந்து வழங்கும் சொற்கள் திசைச்சொற்களாம்.

உ - ம்:—

சொல்லுதலைச் செப்புதல் என்பது தெலுங்கு நாட்டுச் சொல்.

அகப்படுதலைச் சிக்குதல் என்பது கன்னட நாட்டுச் சொல்.

38. சமஸ்கிருதச் சொற்கள் தமிழில் திரிந்தும் திரியாமலும் வரும். அவை வட சொற்களாம். வட நாட்டில் வழங்கும் மொழி சமஸ்கிருதம். சமஸ்கிருதம் தமிழ் என்ற இரண்டு மொழிகளுக்கும் பொதுவான எழுத்துக்களால் வருவது தற்சமம் ஆகும். சமஸ்கிருதத்திற்குரிய சிறப்பெழுத்துக்களால் வருவது தற்பவமாகும்.

உ - ம்:—

அமலம், கமலம்—பொதுவெழுத்தால் வந்த வட சொல் (தற்சமம்).

சுகி, புத்தி—சிறப்பெழுத்தான் வந்த வடசொல் (தற்பவம்).

### பெயர்ச்சொல்.

39. இருதிணை ஐம்பால் மூவிடங்களில் ஒன்றைப் பெற்று வேற்றுமைக்கிடனாக வருவது பெயர்ச்சொல்லாகும்.

தொழிற்பெயரும் வினையாலணையும்பெயரும் பெயர்ச்சொல்லாம். தொழிற்பெயர் படர்க்கையிடத்திலும் வினையாலணையும் பெயர் மூவிடங்களிலும் வரும்.

'வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டு மாகும்.'

40. பெயர்ச் சொற்களின் கடைசியில் வந்து அவற்றின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமையாம். வேற்றுமை எட்டு வகைப்படும்.

'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறுய்ப் பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.'

41. முதல் வேற்றுமையின் உருபு இயல்பாய் நிற்கும் பெயரே. அது வினையையும் வினாவையும் பெயரையும் பயனிலையாகப் பெற்று வரும்.

'எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினக்கொளல் அதன்பய னிலையே'

உ - ம்:—இராமன் வந்தான்—வினை கொண்டு வந்தது
அரசன் இவன்—பெயர் கொண்டு வந்தது.
அவன் யார்—வினாக்கொள வந்தது.

இதனை கருத்தா வேற்றுமை யென்றும் கூறுவதுண்டு. கருத்தா செய்பவன். கருத்தா இயற்றுதற் கருத்தா ஏவுதற் கருத்தா என இருவகைப்படும்.

உ - ம்:—

தச்சன் கோயிலைக் கட்டினான்—இயற்றுதற் கருத்தா
அரசன் கோயிலைக் கட்டினான்—ஏவுதற் கருத்தா

42. இரண்டாம் வேற்றுமை யுருபு ஐ யாகும். அது செயப்படுபொருள் அல்லது கருமத்தைக் குறிக்கும். அதனைக் கரும வேற்றுமை என்பதும் உண்டு.

உ - ம்:—இராமன் குளத்தை வெட்டினான்.

43. மூன்றாம் வேற்றுமை உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு, உடன் ஆம். அது கருவிப் பொருளிலாவது கருத்தாப் பொருளிலாவது உடனிகழ்ச்சிப் பொருளிலாவது வரும். அதனைக் கருவி வேற்றுமை என்பதும் உண்டு.

**உ - ம்:—**

மண்ணால் குடத்தை செய்தான்—கருவி

தச்சனால் கோயில் கட்டப்பட்டது—கருத்தா

இராமனுடன் அவன் வந்தான்—உடனிகழ்ச்சி

44. நான்காம் வேற்றுமை உருபு குவ்வாகும்.

உ - **ம்:**—கூலிக்கு வேலை செய்தான்.

45. ஐந்தாவதனுருபு இல்லும் இன்னுமாம். அது நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப் பொருளில் வரும்.

உ - **ம்:**—

மலையின் வீழ் அருவி—நீங்கற் பொருள்

காக்கையிற் கரியது களாப்பழம்—ஒப்புப்பொருள்

இந்தியாவின் வடக்கு இமயம்—எல்லைப் பொருள்

கல்வியிற் பெரியவர் கம்பர்—ஏதுப்பொருள்.

46. ஆறாம் வேற்றுமை அதுவும் ஆதுவும் பன்மைக்கு அவ்வும் உருபுகளாம்.

**உம்:**—இராமனது கை } ஒருமை
எனது வரவு }

தன பொருள்கள்—பன்மை.

47. ஏழனுருபு கண்கால்கடை இடை முதலியனவாம். அவை இடப்பொருளைக் குறிக்கும்.

மரத்தின்கண் பழம் } இடப்பொருள்.
கடல்வாய்ப் பறவை }

48. எட்டாம் வேற்றுமை விளிப்பொருளைத் தரும், பெயர் விகாரமாகவும் இயல்பாயும் வந்து விளிப்பொருள் உண்டாக்கும். விளி—கூப்பிடு.

'எட்டனுருபே எய்து பெயர்ஈற்றின்
திரிபுகுன்றல் மிகுதல் இயல்பு அயல்
திரிபுமாம் பொருள் படர்க்கை யோரைத்
தன் முகமாகத் தானழைப் பதுவே.'

உம்:—தோழி—தோழீ—ஈறுதிரிபு
அரசன்—அரச—ஈறுகுன்றல்
தந்தை—தந்தையே—மிகுதல்
நம்பி—நம்பி—இயல்பு
புலவர்—புலவீர்—அயல்திரிபு.

47. எந்த வேற்றுமையுருபால் சொல்லப்பட்டதாயினும் பொருள் சென்ற வழியே வேற்றுமை கூறப்படும்.

'யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள் செல்ம ருங்கின் வேற்றுமைசாரும்'

உ-ம்:—காலத்தினாற் செய்த நன்றி.

இங்கு ஆல் உருபு ஏழாம்வேற்றுமை இடப்பொருளைத் தருவதால் ஏழாம் வேற்றுமையாகும்.

## வினைச்சொல்

50. வினை என்றால் செயல் அல்லது தொழிலாகும். தொழிலைக் காட்டுவது வினைச்சொல்லாம். அது தெரிநிலை வினைகுறிப்பு வினை என இருவகைப்படும். தெரிநிலை வினைகாலத்தை வெளிப்படையாகக் காட்டும் குறிப்புவினை அவ்வாறு காட்டாது.

51. அவ் வினைச்சொற்கள் வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் என மூவகைப்பட்டு ஒன்றிற்குச் சிறப்பாயும் பல வற்றிற்குப் பொதுவாயும் வரும்.

**பொதுவினைக்கு உதாரணம்:**—வெளுத்தான். இது ஒருவன் தானே வெளுத்தற்கும் துணிகளை வெளுக்கச் செய்ததற்கும் பொருள்பட்டுத் தன்வினைக்கும் பிறவினைக்கும் பொது வாக வந்தது.

52. வினைமுற்று பொருள் முடிந்து நிற்பது. அவை பொருளாதியாறையும் கொண்டு முடியும்.

அது இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வரும்.

53. 'அன் ஆனிறுமொழி ஆன்பாற் படர்க்கை.'

**உ-ம்:**—செய்தனன், செய்தான்—உயர்திணை ஆண்பால் படர்க்கை.

54. 'அள் ஆளிறுமொழி பெண்பாற் படர்க்கை.'

**உ-ம்:**—நடந்தனள், நடந்தாள்—உயர்திணைப் பெண்பாற் படர்க்கை.

55. 'அர் ஆர் பவ்வூரகர மாரீற்ற
பல்லோர் படர்க்கை மார்வினை யொடுமுடிமே.'

**உ-ம்:**—நடந்தனர், நடந்தார், நடப்ப, கொண்மார்—உயர்திணைப் பலர்பாற்படர்க்கை.

கொண்மார் வந்தார்—வினையொடு முடிந்தது.

56. 'துறுடுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கை.'

**உ-ம்:**—நடந்தது, போயிற்று, பொருட்டு—அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கை.

57. 'அ, ஆ ஈற்ற பலவின் படர்க்கை

ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்.'

| | | |
|---|---|---|
| நடந்தன<br>நடவா— | எதிர்மறை | அஃறிணைப்பலவின்<br>பாற் படர்க்கை. |

58. தன்மை ஒருமை வினைமுற்றுக்கள் அல் அன், என் ஏன் முதலிய விகுதிகளைப் பெற்றுவரும்.

உ - ம்:—நடப்பல், நடப்பன், நடப்பென், நடப்பேன்—யான்; தன்மை ஒருமை.

59. தன்மைப் பன்மை வினைமுற்று. ஆம், அம், எம், ஏம் ஓம் முதலிய விகுதிகளைப் பெற்றுவரும்.

நடப்பாம், நடப்பம், நடப்பெம், நடப்பேம், நடப்போம்—யாம்; தன்மைப் பன்மை வினைமுற்று.

60. ஐ, ஆய், இ என்னும் விகுதிகளைக் கடைசியில் பெற்று வருவனவும் ஏவலில் வரும் வினைகளும் முன்னிலை ஒருமை வினைமுற்றுக்களாம்.

'ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வரூஉம் எல்லாவீற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.'

உண்டனை, உண்டாய், சேறி—முன்னிலை ஒருமை வினை முற்றுக்கள்.

61. 'இர்ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின் அவற்வேல்.'

இர், ஈர் விகுதிகளைப் பெற்று வருபவை முன்னிலைப் பன்மை வினைமுற்றுக்களாம். மின் விகுதியை இறுதியிலுடைய மொழிகள் முன்னிலை ஏவற்பன்மை முற்றும்.

உ - ம்:—உண்டனிர், உண்டீர், உண்மின்.

62. க, ய, ர் என்ற விகுதிகளைக் கொண்டு முடியும் முற்றுக்கள் வியங்கோள் வினைமுற்றுக்களாம். அவை இரு திணை ஐம்பால் மூவிடங்களிலும் வரும். வியங்கோளும் ஏவ லேயாயினும் முன்னிலையில் மாத்திரம் வருவதை ஏவல்வினை என்றும் ஐம்பால் மூவிடங்களிலும் வருவதை வியங்கோள் என்றும் கொள்ளல் வேண்டும்.

உ - ம்:—வாழ்க, வாழிய, வாழியர். } யான், யாம், நீ, நீர், நீங்கள் அவன், அவள், அவர், அது, அவை.

'கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப

63. அர்த்தம் குறைந்து நிற்கும் ஒரு வினை பெயரைக் கொண்டு முடிந்தால் பெயரெச்சமாம். பால் ஒழிய நிற்பது எச்சம்.

உ - ம்:—உண்ட
உண்கிற
உண்ணும் } இராமன்.

64. அர்த்தம் குறைந்து நிற்கும் ஒரு வினைச்சொல் மற் றொரு வினைச்சொல்லைக் கொண்டு முடிந்தால் அது வினை யெச்சமாம். இங்கும் பால் எஞ்சி நிற்கும்.

செய்து வந்தான்.
செய்யப் போனான்.

65. தெரிநிலை வினைமுற்றுச் சொல்லே வினையெச்சமாய் வருவதும் குறிப்பு வினைமுற்றுச் சொல்லே பெயரெச்சமாக வும் வினையெச்சமாகவும் வருவதும் உண்டு. அவை முற்றெச் சம் எனப்படும்.

உ-ம்:—கண்டனன் வணங்கினன்—தெரிநிலை வினை முற்று வினையெச்சமாயிற்று.

வில்லினன் வந்தான்—குறிப்பு முற்று வினையெச்சமாயிற்று.

குழையினன் கொற்றன் வந்தான்—குறிப்புமுற்று பெயரெச்சமாகிக் குழையையுடைய எனப் பொருள் கொண்டது.

---

# செய்யுட் பகுதி.

இனிது நாற்பது (பூதஞ் சேந்தனார் அருளியது.)

1. உடையான் வழக்கினிது; ஒப்ப முடிந்தான்
மனை வாழ்க்கை முன்னினிது; மாணதாமாயின்
நிலையாமை நோக்கிநெடியார் துறத்தல்
தலையாகத் தானினிது நன்கு.

2. ஏவது மாறா இளங்கிளை முன்னினிதே;
நாளும் நவை போகான் கற்றல் மிக வினிதே;
ஏருடை யான் வேளாண்மை தானினிது; ஆங்கினிதே
தேரிற்கோள் நட்புத் திசைக்கு.

3. ஆற்றும் துணையால் அறஞ் செய்கை முன்னினிதே;
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே;
வாய்ப்புடையராகி வலவைகள் அல்லாரைக்
காப்படையக் கோடல் இனிது.

4. அந்தண ரோத்துடைமை ஆற்ற மிகவினிதே;
பந்த முடையான் படையாண்மை முன்னினிதே;
தந்தையே யாயினும் தானடங்கான் ஆகுமேல்
கொண்டடையானை லினிது.

5. தங்கண் அமர்வுடையார் தாம் வாழ்தல் முன்னினிதே ;
அங்கண் விசும்பின் அகனிலாக் காண்பினிதே ;
பங்கமில் செய்கையராகிப்பரிந்தி யார்க்கும்
அன்புடைய ராத லினிது.

6. கடமுண்டு வாழாமை காண்ட லினிதே ;
நிறை மாண்பில் பெண்டிரை நீக்கல் இனிதே ;
மனமாண்பிலா தாரை அஞ்சி அகறல்
எனைமாண்பு தானினிது நன்கு.

7. அதர் சென்று வாழாமை ஆற்ற இனிதே ;
குதர் சென்று கொள்ளாத கூர்மை இனிதே ;
உயிர்சென்று தான்படினும் உண்ணார் கைத்துண்ணாப்
பெருமைபோல் பீடுடை யதில்.

8. குழவி பிணியின்றி வாழ்தல் இனிதே ;
கழறும் அவையஞ்சான் கல்வி இனிதே ;
மயரிகள் அல்லராய் மாண்புடையார்ச் சேரும்
திருவும் தீர்வின்றேல் இனிது.

9. மன்றில் முதுமக்கள் வாழும் பதி இனிதே ;
தந்திரத்தின் வாழுந் தவசிகள் மாண்பினிதே ;
எஞ்சா விழுச்சீர் இருமுது மக்களைக்
கண் தொழுதல் காலை யினிது.

10. நட்டார் புறங் கூறான் வாழ்தல் நனியினிதே ;
பட்டாங்குப் பேணிப் பணிந்தொழுகல் முன்னினிதே;
முட்டில் பெரும் பொருளாக்கியக் கால் மற்றது
தக்குழி யீதலே நன்று ;

11. சலவரைச் சாரா விடுதல் இனிதே ;
புலவர்தம் வாய்மொழி போற்றல் இனிதே ;

மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாம்
தகுதியால் வாழ்தல் இனிது.

12. பிறன்கைப் பொருள்வௌவான் வாழ்தல் இனிதே ;
அறம் புரிந் தல்லவை நீக்க லினிதே ;
மறந்தேயு மாணா மயரிகள் சேராத்
திறந்தெரிந்து வாழ்தல் இனிது.

13. காவோ டறக்குளம் தொட்டன் மிகவினிதே ;
ஆவோடு பொன்னீதல் அந்தணர்க்கு முன்னினிதே ;
பாவமும் அஞ்சாராய்ப் பற்றும் தொழின்மொழி
சூதரைச் சோர்தல் இனிது.

14. ஐவாய வேட்கை அவா வடக்கன் முன்னினிதே ;
கைவாய்ப் பொருள் பெறினும் கல்லார்கண் தீர்வினிதே;
நில்லாத காட்சி நிறையில் மனிதரைப்
புல்லா விடுதல் இனிது.

15. ஆற்றானை ஆற்றென் றலையாமை முன்னினிதே ;
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே ;
ஆக்கம் அழியினும் அல்லவை கூறாத
தேர்ச்சியில் தேர் வினியதில்.

சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச் செய்த

## நன்னெறி.

(காப்பு)

மின்னெறி சடாமுடி விநாயகன் அடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும் வருமே.

1. என்று முகமன் இயம்பா தவர்கண்ணும்
சென்று பொருள் கொடுப்பார் தீதற்றோர்—துன்றுசுவை
பூவிற் பொலிகுழலாய் ! பூங்கை புகழவோ
நாவிற் குதவும் நயந்து.

2. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ, நன்னுதால்! ஒண் கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு ?

3. தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளின்அவர்
தங்கட் குரியவரால் தாம்கொள்க—தங்கழகு
குன்றாமற் செய்தபூங் கொம்பனையாய்! ஆவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து.

4. பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

5. நீக்கம் அறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர் பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்!
நெல்லின் உமி சிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மைநிலை போம்.

6. காதல் மனையாளும் காதலனு மாறின்றித்
தீதில் ஒருகருமம் செய்பவே—ஓதுகலை
எண்ணிரண்டும் ஒன்றுமதி என்முகத்தாய்! நோக்கறுன்
கண்ணிரண்டும் ஒன்றையே காண்.

7. கடலே அனையம்யாம் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி—விடலே;
முனிக்கரசு கையால் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும்.

8. உள்ளம் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளும் குணமே குணமென்க—வெள்ளம்

தடுத்தல் அரிதோ! தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு.

9. மெலியோர் வலிய விரவலரை அஞ்சார்
வலியோர் தமைத்தா மருவில் ;—பலியேல்
கடவுள் அவிர்சடைமேற் கட்செவியஞ் சாதே
படர்சிறைய புள்ளரசைப் பார்த்து.

10. தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறாஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறை யிருளை நீக்குமே னின்று.

11. பொய்ப்புலன்கள் ஐந்துநோய் புல்லியர்பால் அன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம்—துப்பில்
சுழற்றும்கொல் கற்றாணைச்சூறு வளிபோய்ச்
சுழற்றும் சிறுபுன் துரும்பு ?

12. வருந்தும் உயிரொன்பான் வாயில் உடம்பில்
பொருந்துதல் தானே புதுமை—திருந்திழாய் !
சீதநீர் பொள்ளல் சிறு குடத்து நில்லாது
வீதலோ ? நிற்றல் வியப்பு.

13. பெருக்கமொடு சுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்பமொடு கொடுப்பர் மேலோர் ;—சுரக்கும்
மலை விளையும் வேய்த்தோண் மாதே ! மதியின்
கலையளவு நின்ற கதிர்.

14. தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத் தோமென்று
தலையா யவர்செருக்குச் சார்தல்—இலையால்
இரைக்கும்வண் டூதுமலர் ஈர்ங்கோதாய் ! மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு.

15. இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லாம் இருந்துமவற் கென்செய்யும்—நல்லாய்!
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

16. தம்மையும் தங்கள் தலைமையையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மி
னிழியினும் செல்வர் இடர்தீர்ப்பர்; அல்கு
கழியினும் செல்லாதோ கடல்?

17. எந்தைநல் கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ?—பைந்தொடீ!
நின்றுபயனுதவி நில்லா அரம்பையின் கீழ்க்
கன்றும் உதவும் கனி.

18. இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே;—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்கா தழற்கதிரால் தண்ணென்
கதிரவரவாற் பொங்கும் கடல்.

19. நல்லோர் வரவால் நகைமுகங்கொண் டின்புறீஇ
அல்லோர் வாவான ழுங்குவார்—வல்லோர்
திருந்தும் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்தும் சுழல்கால் வர.

20. பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய் கண்டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க—தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

21. எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும்
எழுத்தறி வார்க்காணின் இலையாம்—எழுத்தறிவார்

ஆயும் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில்
வீயும் சுரநீர் மிகை.

22. ஆக்கும் அறிவான் அலது பிறப்பினல்
மீக்கொள் உயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரார் அரவின் பருமணிகண் டென்றும்
கவரார் கடலின் கடு.

23. உண்டு குணமிங் கொருவருக் கெனினும்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்பும் கனி.

24. கல்லா அறிவிற் கயவர்பால் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகனம் நண்ணரே—வில்லார்
கணையிற் பொலியும் கருங்கண்ணய்! நொய்தாம்
புணையிற் புகும்ஒண் பொருள்.

25. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்!
கண்ணளவாய் நின்றதோ காணுங்கதி ரொளிதான்
விண்ணளவா யிற்றே? விளம்பு.

26. கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தம்மால் இயலுதவி தாம்செய்வர் :—அம்மா!
முளைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று.

27. முனிவினும் நல்குவர் மூதறிஞர் ; உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்—நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் ; எட்டிபழுத்
தாயினும் ஆமோ? அறை.

28. உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கும் ஒருகோடியாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியாய்! அஞ்சுமோ
மண்ணிற் புலியை மதிமான் ?

29. கொள்ளும் கொடுங்கூற்றம் கொள்வான் குறுகுதன்முன்
உள்ளம்கனிந் தறஞ்செய் துய்கவே—வெள்ளம்
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்
பெருகுதற்கண் என்செய்வார் ? பேசு.

30. பேரறிஞர் தாக்கும் பிறர்துயரம் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய் !
மெய் சென்று தாக்கும் வியன்கோல் அடிதன்மேல்
கைசென்று தாக்கும் கடிது.

31. பன்னும் பனுவற் பயன்றேர் அறிவிலார்
மன்னும் அறங்கள் வலியிலவே—நன்னுதால்!
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்.

32. எள்ளா திருப்ப இழிஞர்போற் றற்குரியர்;
விள்ளா அறிஞரது வேண்டாரே—தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுளம் அன்றிக்
கரைகாப் புளதோ கடல் ?

33. அறிவுடையா ரன்றி அதுபெறார் தம்பாற்
செறிபழியை அஞ்சார் சிறிதும் ; பிறைநுதால் !
வண்ணம்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு ?

34. கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள் ;
மற்றையர் தாம் என்றும் மதியாரே—வெற்றிநெடும்

வேல் வேண்டும் வாள்விழியாய்! வேண்டா புளிங்காடி
பால் வேண்டும் வாழைப்பழம்.

35. தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பார் இல்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்?

36. பெரியோர்முன் தன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும்—தெரியாய்கொல்?
பொன்னுயர்வு தீர்த்த புனையிழாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.

37. நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்
அல்லார் செயுங்கேண்மை ஆகாதே—நல்லாய்! கேள்!
காய்முற்றில் தின்தீங் கனியாம்; இளந்தளிர்நாள்
போய் முற்றின் என்னாகிப் போம்?

38. பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத்தா மற்றெவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறப்புப் பொன்னே! அதுபுனையாக்
காணும் கண் ஒக்குமோ? காண்.

## திருப்புகழ்.

### குன்று தோறாடல்

1. வஞ்சக லோப மூடர் தம்பொருள் ஊர்கள் தேடி
 மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரி காரி என்றிசை வாது கூறி
 வந்தியர் போல வீணில் அழியாதே
செஞ்சரண் நாத கீத கிண்கிணி நீப மாலை
 திண்திறல் வேல்ம யூர! முகமாறும்

செந்தமிழ் நாளும் ஓதி உய்ந்திட ஞானம் ஊறு
செங்கனி வாயில் ஓர் சொல் அருள்வாயே!
பஞ்சவன் நீடு கூனும் ஒன்றிடு தாபமோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலி யோடு வெங்கழு வேற வோது
பண்டித! ஞான நீறு தருவோனே!
குஞ்சரம் யாளி மேவு பைம்புன மீதுலாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்
கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ ருடல்மேவு பெருமாளே!

பழநி

2. கருவினுரு வாகி வந்து வயதளவிலே வளர்ந்து
கலைகள் பலவே தெரிந்து மதனாலே
கரியகுழல் மாதர் தங்கள் அடி சுவடு மார்புதைந்து
கவலை பெரி தாகி நொந்து மிகவாடி
அரகர சிவாய வென்று தினமும் நினையாமல் நின்று
அறு சமய நீதி ஒன்றும் அறியாமல்
அசன மிடு வார்கள் தங்கள் மனைகள் தலைவாசல் நின்று
அனுதினமும் நாண மின்றி அழிவேனோ!
உரக படமேல் வளர்ந்த பெரிய பெரு மாளரங்கர்
உலகளவு மால் மகிழ்ந்த மருகோனே!
உபயகுல தீபதுங்க விருது கவி ராஜசிங்க
உறை புகலியூரிலன்று வருவோனே!
பரவை மனை மீதிலன்று ஒருபொழுது தூது சென்ற
பரமனரு ளால் வளர்ந்த குமரேசா
பகைகொளசுரர் சேனை கொன்று அமரர் சிறை மீளவென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே!

## திருவவதாரம்.

(அயோத்திமாநகர்)

1. நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ நிறைநெடு மங்கல
[நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ உயிரினிருக்கையோ திருமகட்
[கினிய
மலர்கொலோ மாயோன் மார்பின் நன்மணிகள் வைத்த பொற்
[பெட்டியோ வானோர்
உலகின் மேலுலகோ ஊழியினிறுதி யுறையுளோ யாதென
[வுரைப்பாம்

(தசரதன்)

2. அம்மாண கருக்கரசன் அரசர்க் கரசன்
செம்மாண் தனிக்கோல் உலகேழினும் செல்ல நின்றான்
இம்மாண் கதைக்கோர் இறையாய இராமனென்னும்
மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான்.

3. தாயொக்கு மன்பிற் றவமொக்கும் நலம் பயப்பில்
சேயொக்கு முன்னின் றொரு செல்கதி உய்க்கு நீரான்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கும் நுணங்குகேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்.

4. ஈய்ந்தே கடந்தான் இரப்போர்கடல் எண்ணிணுண்ணூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர் வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவிற் றொடர்போக பௌவம்.

5. ஆயவன் ஒருபகல் அயனையே நிகர்
தூயமா முனிவரன் தொழுது தொல்குலத்
தாயரும் தந்தையும் தவமும் அன்பினால்
மேயவான் கடவுளும் பிறவும் வேறநீ.

6. அறுபதி னாயிரம் ஆண்டும் ஆண்டுற
உறுபகை ஒடுக்கி இவ்வுலகை ஓம்பினேன்
பிறிதொரு குறையிலை எற்பின் வையகம்
மறுகுறும் என்பதோர் மறுக்கம் உண்டரோ ?

7. முரசறை செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தம் கோமகன் அனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் மனத்தின் எண்ணினன்.

8. அலைகடல் நடுவணோர் அனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரும் மாமுகில்
கொலைத்தொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பனென்
றலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை.

9. ஈதுமுன் நிகழ்ந்தவண்ணம் எனமுனி இதயத்தெண்ணி
மாதிரம் பொருத திண்டோள் மன்னநீ வருந்தல் ஏழேழ்
பூதல முழுதும் காக்கும் புதல்வரை அளிக்கும் வேள்வி
தீதற முயலினைய சிந்தை நோய் தீருமென்றான்.

(கலைக்கோட்டு முனிவர் துணைக்கொண்டு யாகம் செய்தல்.)

10. மாமணி மண்டபம் மன்னி மாசறு
தூமணித் தவிசிடைச் சுருதியே நிகர்
கோமுனிக் கரசினை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினன்.

11. உலப்பில்பல் லாண்டெலாம் உறுகண் இன்றியே
தவப்பொறை ஆற்றினென் தனையர் வந்திலர்
அலப்புநீர் உடுத்தபார் அளிக்கும் மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்கல் வேண்டுமால்.

12. என்றலும் அரசநீ இரங்கல் இவ்வுல
கொன்றுமோ உலகமீ ரேழும் ஓம்பிடும்
வன்றிறல் மைந்தரை அளிக்கு மாமகம்
இன்றுநீ இயற்றுதற் கெழுக ஈண்டென்றான்.

13. ஆயதற் குரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர் நிருபர்க் கேந்தலும்
தூயநற் புனல்படீஇச் சுருதி நான்முறை
சாய்வறத் திருத்திய சாலை புக்கனன்.

14. முகமலர் ஒளிதர மொய்த்து வானுளோர்
அகவிரை நறுமலர் தூவி ஆர்த்தெழ
தகவுடை முனியும்அத் தழலின் நாப்பணே
மகவருள் ஆகுதி வழங்கி னனரோ.

15. ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டமீ
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரிப் பங்கியும் சிவந்த கண்ணுமா
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே!

16. மாமுனி அருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் சுரிகுழல் தொண்டைத் தூயவாய்க்
காமர்ஒண் கோசலை கரத்தின் ஓர்பகிர்
தாமுற அளித்தனன் சங்கம் ஆர்த்தெழ.

17. கைகயன் தனையைதன் கரத்தும் அம்முறைச்
செய்கையின் அளித்தனன் தேவர் ஆர்த்தெழ
பொய்கையும் நதிகளும் பொழிலும் ஓதிமம்
வைகுறு கோசலை மன்னர் மன்னனே!

18. நமித்திரர் நடுக்குறு நலங்கொள் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையில்

சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினி
சமித்ததென் பகையெனத் தமரொ டார்ப்பவே!

19. பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தவை
தம்மையும் சுமித்திரை தனக்கு நல்கினன்
ஒன்னலர்க் கிடமும் வேறுலகின் ஓங்கிய
மன்னுயிர் தமக்கு நீள்வலமும் துள்ளவே.

(அவதாரம்).

20. ஒருபகல் உலகெலாம் உதரத்துட் பொதிந்
தருமறைக் குணர்வரும் அவனை அஞ்சனக்
கருமுகில் கொழுந்தெழில் காட்டும் சோதியை
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை

21. ஆசையும் விசும்பு நின்றமரர் ஆர்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துற
பூசமு மீனமும் பொலிய நல்கினன்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

22. தலையவிழ் தருவுடைச் சயில கோபனும்
கிளையுமந் தரமிசை கெழூமி ஆர்ப்புற
அளைபுகும் அரவினோ டலவன் வாழ்வுற
இளையவற் பயந்தனள் இளைய மென்கொடி

23. படங்கிளர் பஃறலைப் பாந்தள் ஏந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினாள் மீட்டும் ஈன்றனள்

24. இறைதவிர்ந் திடுகபார் யாண்டொ ரேழ்நிதி
நிறைதரு சாலைதாள் நீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்கென
அறைபறை என்றனன் அரசர் கோமகன்.

(நாமகரணம்).

25. கரா மலையத்தளர் கைக்கரி எய்த்தே
அரா வணையிற்றுயில் வோயென அந்நாள்
விராவி யளித்தருள் மெய்ப்பொரு ளுக்கே
இராமனெனப் பெயர் ஈய்ந்தன னன்றே.

26. கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருள் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திட மற்றைய ஒளியை
பரத னெனப்பெயர் பன்னின னன்றே.

27. உலக்குனர் வஞ்சகர் உம்பரும் உய்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தனள் இந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
இலக்குவ னென்ன இசைத்தன னன்றே.

28. முத்துருக் கொண்டுசெம் முளரி அலர்ந்தால்
ஒத்திருக்கும்மெழி லுடையவிவ் வொளியால்
எத்திருக் குங்கெடும் என்பதை எண்ணுச்
சத்துருக் கன்னெனச் சாத்தினனமம்.

29. ஐயனும் இளவலும் அணிநில மகள்தன்
செய்தவம் உடைமைகள் தெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழல் உறும்இழை யெனநிலே திரிவார்.

30. பரதனும் இளவலும் ஒருநொடி பகிரா
திரதமும் இவுளியும் இவரினும் மறைநூல்
உரைதரும்பொழுதினும் ஒழிகிலர் எனையாள்
வரதனும் இளவலும் எனமரு வினரே.

THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.

# எம்மிடம் கிடைக்கும் புத்தகங்கள்



APPROVED BY THE TEXT-BOOK COMMITTEE.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| வாசக மஞ்சரி பாலர் பாடம் | ... | 0 | 2 | 6 |
| வாசக மஞ்சரி மலர் 1. இரண்டாம் வகுப்பு | ... | 0 | 3 | 0 |
| ஷை ,, 2. மூன்றாம் வகுப்பு | ... | 0 | 4 | 0 |
| ஷை ,, 3. நான்காம் வகுப்பு | ... | 0 | 5 | 0 |
| ஷை ,, 4. ஐந்தாம் வகுப்பு | ... | 0 | 6 | 0 |
| ஷை ,, 5. ஆறாம் வகுப்பு | ... | 0 | 7 | 0 |
| ஷை ,, 6. ஏழாம் வகுப்பு | .... | 0 | 8 | 0 |
| ஷை ,, 7. எட்டாம் வகுப்பு | .... | 0 | 9 | 0 |
| ஸ்ரீ ராம தூதன் | ... | 0 | 7 | 0 |
| மணித்திரள் தொகுதி 1. | ... | 0 | 2 | 6 |
| ஷை ,, 2. | ... | 0 | 3 | 0 |
| ஷை ,, 3. | ... | 0 | 4 | 0 |
| ஷை ,, 4. | ... | 0 | 5 | 0 |

*For Copies, apply to:—*

**MURTHY & Co.,**

***Book-Sellers & Publishers,***

10, North Ramalinga Mudaliar Street,

***MAYAVARAM.***

S. I. RY.